160

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவசந்நிதானமுறை.

கடம்பூர்
சுயம்பிரகாசதேசிகர்மாணுக்கராகிய
சிதம்பரத்தைச்சார்ந்தபாளையங்கோட்டை
என்றுவழங்கும்
தென்னபுரி

## தாண்டவராயமுநிவர்

இயற்றியது.

இஃது

சிதம்பரம்.
சிவசுப்பிரமணியசுவாமிகள்
தென்னபுரி
கனகராயபொன்னம்பலப்பிள்ளையவர்கள்
கருத்தின்படி
வேலாயுதப்பத்தரவர்களால்
சென்னப்பட்டணம் கொண்ணூர்

## மாணிக்கமுதலியார்

கம்பேனியாரவர்களது
மநோன்மணிவிலாசவச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

விஷு வருஷம் பங்குனிமீ

உ

சிவமயம்.

## சிறப்புப்பாயிரம்.

### சிதம்பரம் கந்தசுவாமிகள் இயற்றியது

### அச்சிற்பதிப்பித்தோர்சிறப்பு.



நிலைமண்டிலவாசிரியப்பா.

சீர்பெறுநவமணி திரைக்கரத்தாலே
பார்பெறவெறிந்து பரவியபொன்னிப்
பெண்விளையாடும் பெருஞ்சோணாட்டிற்
கண்விளைமறையா கமாந்தநிக்ககரோ
லவணையுந்தமரொன லாகமதெளச்சொலுக்
தவமுறுபெரியோர் தகவாய்ப்புகழுங்
கன்னலுந்தெங்குங் கமுகுஞ்சூழ்தரு
தென்னபுரியிற் சிறந்திடவுதித்தோன்
சஞ்சலமகற்றுஞ் சாம்பநடேசர்
குஞ்சிதரஞ்சித செஞ்சரண்பணிவோன்
கரவாக்ஷேத்திரக் கலிவெண்பாமுதற்

## சிறப்புப்பாயிரம்.

பிரபந்தங்கள் பேசியவுரவோன்
கருணையுளத்தோன் கல்விக்கடலோன்
பொருளுறுகன்னன் போலுங்கொடையான்
தனுவாதிகளைத் தள்ளிப்பிரம
வனுபவநெறியி னன்புடனேங்குந்
தன்னேரில்லோன் தாண்டவராய
னென்னும்பெரிய விருந்தவத்தோன்செய்
சிவசந்நிதான முறைச்செந்நூலைத்
தவகுணவிபூதி ருத்திராட்சதாரண
விசுவகுலவே லாயுதபத்தன்
விசுவாசத்தொடு வேண்டுகோளின்படி
யகந்தவிர்சிந்தைய ரந்தணர்நேசர்
செகம்புகழ்புகழோர் சிந்தைமெய்த்தூயோர்
சத்தியவாக்கரிச் சந்திரனேப்போர்
பத்தியாய்க்கொடுத்தலிற் கற்பகப்பண்போர்
புலக்கனொடுசிவ பூசாதுரந்தரர்
இலக்கணமறியான் புலக்கணிலாதோன்
என்னும்பழமொழிக் கிடமாகாமல்
நன்னூன்முதலாப் பன்னூலுணர்ந்தோர்
சற்குணமெல்லாந் தழைத்திடுவிளாகம்

## சிறப்புப்பாயிரம்.

நற்கொங்குராய நடராசேந்திரன்
செழிவுறுசெல்வர்சேர் தென்னபுரிவாழ்
எழில்வைசியகுல ராமலிங்கேந்திரன்
என்னுமன்பர்க ளெழுதாவெழுத்தெனப்
பன்னுமச்சிற் பதிப்பித்தனரே.,

சிதம்பரம்-கேணிபடம்
சுப்பிரமணியசுவாமிகளியற்றியது
ஆசிரியவிருத்தம்.

சிவசந்திதாநமுறையெனுநூலைத் தெளிவுறச்செய்தவனெவரும், அவமெனுநாமரூபம்போய்சச்சிதானந்தமெய்யெனவறிந்து, பவமெனுமுத்திக்கரையிவர்ந்துய்யப் பாளையங்கோட்டையில்வாழுந், தவமெனுந்திரள்களெலாமொருவடிவாந் தாண்டவராயமாமுநியே.

விளாகம்-கொங்குராய
நடராஜபிள்ளையவர்களியற்றியது
கட்டளைக்கலித்துறை.

தாண்டவமாடு நடேசன்றிருவடிச் சாத்தினன்மை, யீண்டுசிவசந்நிதானமுறைத்தொடையே பரிவா, யேன்பெறுதென்னபுரிவாழ்காரா ள விரிசப்பனும், வேண்மகத்தாண்டவராயமுநிவன்விசேடனனே

உ

திருச்சிற்றம்பலம்.

# அறிவிப்பு.

---

இந்நூலாசிரியராகிய-தென்னபுரி - தாண்டவராயமுநிவரவர்களாலியற்றி அச்சிற்பதிப்பித்திருக்கும் புத்தகங்களாவன.

வேதாந்தசங்கற்பநிராகரணம்.
வைராக்கியசதகத்தோத்திரவுரை.
சுயம்பிரகாசதேசிகர்பிள்ளைத்தமிழ்.
திருத்தொண்டர்போற்றிக்கலிவெண்பா.
விளாகம் நிருத்தவிநாயகர்பதிகம்.

இனிஅச்சிற்பதிப்பிக்கப்படும்புத்தகங்களாவன.

திருத்தொண்டரந்தாதி.
க்ஷேத்திரக்கலிவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

சிவசந்நிதானமுறையின்

# அட்டவணை.

# அட்டவணை.



ஆகமொத்தம் திருவிருத்தங்கள் ௪க௫.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீசாம்பநடேசாயநம:



# சிவசந்நிதானமுறை.

## விநாயகர்காப்பு.

நேரிசைவெண்பா.

தேன்மேவுமாமலர்கள் செங்கரத்திலேகொண்டு
வான்மேவுமண்டரொலா மன்னன்பு—தான்மேவிப்
பூசித்துநின்று புகழுங்கணபதியே
நேசிக்கவென்னுளத்தே நில்.

## புலியூரந்தாதி.

கற்பகவிநாயகர்துதி.

கட்டளைக்கலித்துறை.

புலியூரந்தாதியுராக்கத்துணைநற்புயங்கமொட்டும்
புலியூரந்தாதிதழியவன்சேய்துதிப்போர்பரிகைப்
புலியூரந்தாதியருந்தாதர்செல்வம்புகழ்கதியும்
புலியூரந்தாதியகற்றச்செய்கற்பகப்போதகமே.

## நான்முகம்.

### கட்டளைக்கலித்துறை.

பூமேவுசெங்கமலமலர்த்தாளுநற் பொன்னுலகக், காமேவுவண்கரமுங்கிரித்தோளுங் கருங்களமும்,மாமேவுநல்லருட்கண்முகமுங்கொண்டு வந்தருள்வாய், பாமேவுதென்புலியூர்நடராஜபசுபதியே. (க)

பதிக்குங்கருணையனிச்சப்பதமும் பதுமமதா, மதிக்குங்கரமுநல்வேயனதோளு மலர்மதிபோற்,கதிக்குங்கதிர்முகமுந்தாங்குமையொடென் கண்ணெதிர்வா, துதிக்குங்கமலத்தடம்புலியூர்வளர் சுந்தரனே.

சுந்தரமாமறையாகமமன்புடைத் தொண்டரயன், மந்தரமாமலையிட்டேகடல்கடை வானமரர், கந்தரவூர்திமுதற்சூழுமோலக்கங் காணவருவிந்தரவூர்சடைத்தென்புலியூர்வள ரெம்பரனே. (௩)

பரவியதென்புலியூர்ச்சிற்சபையிற் பனிப்பதுமவூவியதாளநொடிக்கவரிமுழ வும்முழக்க, விரவியவம்மைகளிப்புறவேயருண்மிக்கநடம், மரவியற்சிதைபென்கண்காணநீயென்று மன்னவனே. (ச)

மன்னியவன்பின்மனநெக்குருகி மருவியகண்,
டுன்னியநீர்மிக்குறமாமதுரத் துதிகள்பல, பன்னிய
தொண்டரொடுங்கூடவேழையைப் பார்த்தருள்வா
ய், மின்னியல்வான்சென்மதிற்புலியூருடை விண்ண
வனே. (ரு)

விண்ணடியானவசத்தையுளபடி வேறுகண்டு,
கண்ணருளாற்றமைக்கண்டுபின்னுன்னிற் கலந்திடு
மெய், நண்ணடியார்க்கடியேனேவல்செய்திட நாடி
டுவா, யெண்ணவரந்தருதென்புலியூர்வள ரொந்தந்
தையே. (சு)

தந்தையுந்தாயுந்தமருங்குலமுந் தனமுமிகு, சி
ந்தைவிளங்கியதெய்வமும்போதிக்குந் தேசிகனும்,
விந்தையிருக்கும்புயவேந்துநீயன்றிவேறுமுண்டோ
முந்தைத்தலமெனுந்தென்புலியூரின் முதுசிவமே. ()

மேலாய்விளங்கும்புலியூருறையும் விமலவெளி,
காலாயனல்புனன்மண்ணியமான கதிரவன்வெண்,
மாலாமதியந்திசைகாலமெய்பொய்பகலிரவோ, டா
லாலந்தேவவமுதமற்றியாவுநீ யாயினேயே. (அ)

ஆயும்புகழ்ப்புலியூருடையாய்நின் னருளன்றி விண்,ணேயுமத்தேவருமுன்பதஞ்சித்தத் தெனவுமுண்டோ, நாயும்பருந்துமெமதெனும்யாக்கையை நாமெனவே, பேயும்பழிக்கடக்குமியானேவுனைப் பேணுவனே. (கூ)

பேணக்க நிதருந்தென்புலியூரிற் பிறங்குசடைக், கோணக்கதிர்மதியோயருளாற்சுவை கொண்டவரு, காணக்கனியுமனத்தடியார்சென்னி நண்ணுமுன்றன், சோணக்கமலக்கழல்பாடவந்து தொடங்கினனே. (க0)

தொடங்கியவாழ்க்கைதுறவுமெய்ஞ்ஞானத் தணிபொழுக்க, மடங்கியவுள்ளமருட்டுணையன்றி யமைவுறுமோ. நுடங்கியமின்னன்மழைமேகஞ்சென்றநுழைந்துநித, முடங்கியகோபுரம்வாழ்புலியூர்கொண் முழுமுதலே. (கக)

முதலந்தநீங்கும்புலியூரமரு முழுமணியே, கதலந்தத்தார்க்கியனேற்குங் கொடிகொள் கருத்தன்முதற், சிதலந்தம்யாவையுமாட்டும்பராவின்று சீரருள்செய், புதலந்தமாதியமாமலர்கொண்டுனைப் பூசிக்கவே, (கஉ)

பூசாபலந்தருபுண்ணியனேவினை பொங்குமல, நாசாகுணமலையேபுலியூரினி லண்ணியவா, வாசாபி சாசமகற்றியவன்ப ரகத்தினுள்ளே, வாசாவருளொ டுமுன்வந்துணர்த்து மறைமுடிவே. (கங)

மறையவனே தென்புலியூர்விளங்கு மனோகர னே,யிறையவனேபெருவாரிதிநஞ்ச மிலக்குகண்ட க்,கறையவனேதொழுந் தொண்டர்கள்செய்தகறை பொறுக்கும், பொறையவனே வினைநீங்கும்படிக்கி ன்று போதிப்பையே. (கச)

போதிக்கவாகுருவாகிமெய்ஞ்ஞானத்தைப்போ தவருள், சாதிக்கவாகுற்றமாக்கிடுமாணவன் தன்னை யின்று, சேதிக்கவாகுறையாதேவளர்சஞ் சிதவினை யைய, வாதிக்கவாகுணத்தென்புலியூரினில் வாழ்பவ னே. (கரு)

வாழ்ந்தமண்ணேருமவ்விக்கிரனுதியவானவரு ந், தாழ்ந்தகுடும்பப்பிணிப்பதனாற்கெட ஞானுணர்வு து, மாழ்ந்தவென்போலப்புவனியின்மேலொரு மந் தனுண்டோ, சூழ்ந்தபிறப்பறச்செய்புலியூரமர் சோ தியனே. (கசா)

சோதிவிளங்குந்திருவடிபோய்நல்ல தொல்லை
மலைச்,சாதிவிளங்குமயிலன்னசாய றழைக்குமுமை,
பாதிவிளங்குந்திருவடிவாவருட் பைங்கடலே, நீதி
விளங்கும்புலியூரமரு நிரந்தரனே. (கஎ)

நிரந்தரமைம்புலவீதியிலேசென்று நின்றுழன்
று, துரந்தரனுமுனைநாடாதலையுந் துணையிலியான்,
றரந்தரமில்லெனநோக்காதுமிக்க தயைசுரந்து,வரந்
தரவேண்டும்புலியூர்விளங்கிய வானவனே. (கஅ)

வாமங்களமுருகோயாதவீதியுமன்னியநல்,லோ
மங்களுந்திகழ்தென்புலியூர்கொ ளுருத்திரனே,காம
ங்களவுங்கடுங்கொலைக்கோபமுங்கைவிட்டினி, நேம
ங்கணிட்டைகண்மேவியென்சித்த நிலைபெறவே. ()

நிலையார்பெரும்பற்றத்தென்புலியூரமர் நின்மல
னே, கொலையார்வுறும்புலித்தோலுடையாபொற் கு
டிமிமலைச், சிலையார்கரத்தவனேயடிநாயினன்செய்வி
னைக, டலையாரநீமுனம்வந்தேயருளைச்சுரந்தருளே.()

தருமந்தழைவுறுந்தென்புலியூரமர்சங்கரனே,க
ருமந்தவநற்செபமுட்டியானவ் கடந்தவொரு, வரும

பிஞ்சைக்கடந்த புளிப்பழம்போலப் பிறங்குபு
ல, மஞ்சைக்கடந்தங்கழல்பேணவாஞ்சை யகத்தரு
ள்செய், பஞ்சைக்கடந்தவடிமாதர்மேவும் பவனமுய
ர், மஞ்சைக்கடந்ததிருப்புலியூரமர் வண்மையனே.()

வண்மையனேபுலியூருறைவோயொருமாமறை
சொல், லுண்மையனேகருணாகரனேயன்ப ருள்வி
ளையுந், தண்மையனேதம்முணர்வார்க்குமற்றையர்த
ங்களுக்கு, மண்மையனேமிக்கசேய்மையனேயென்
னை யாண்டருளே. (உஎ)

ஆண்டவனே யகிலாண்டமேலாமுய வம்பலஞ்
செய், தாண்டவனேமலர்ப்பாதத்தில்வேதத் தனிச்
சிலம்பு, பூண்டவனேபுலியூரவனேகங்கை பொங்கு
சடை, நீண்டவனே நற்குணாகரனேயென்று நின்ற
வனே. (உஅ)

நின்றாலுங்கீழே கிடந்தாலுமோடினு நீதிநன்
றோ, டன்றாயினுமற்றையாதினுமெங்குமல் லாப்பிரி
ந்த, கன்றாகியுள்ளங்கனிந்துன்னைநாடக் கருணைபுரி,
குன்றாவளந்தருதென்புலியூர்ச்சற் குணநிதியே. ()

குணமெட்டுமேவுஞ்சதாசிவமேயெங்குங் கோ
லுந்திசைக், கணமெட்டுமாயதற்கப்பாலுமாய்நின்ற

ந்தஞானவமுதத்தையேழையருந்திடச்செய், தெரும
ந்துறப்புரிபஞ்ஞானமாம்பசி தீர்வுறவே. (உக)

தீராதிருக்கும்பவவனந்தாண்டித் திரும்பியிங்
கு, வாராதிருக்கும்பதநகர்மேவி வளருமின்பம், பே
ராதிருக்குநிலைநிற்கவேயருள்பிடைவினை, சேராதிரு
க்கும்புலியூருறையுஞ் சிதம்பரனே. (உஉ)

பரனேதிருத்தென்புலியூர்வளரும் பருத்தமழு
க், கரனேஜடாமுடிமீதேநகுசிரங் கண்டுவைத்த, ஹா
ரனேயரியதிருமால்விடையி லமருமகா, சுரனேமன
ந்தளர்ந்தேன்றளர்ந்தேன்செய்வை தொல்லருளே.()

அருள்வந்துநிற்குநெறிவிட்டுமிக்க வவனியில்
வாழ், பொருள்வந்துநிற்கும்வழிகொண்டுவாழ்ந்த பு
லையனுளம், வெருள்வந்துநிற்கும்படிகாலன்மேவிய
வேலையிற்செய், தெருள்வந்துநிற்கும்படிபுலியூரமர்
செஞ்சுடரே. (உ௩)

சுடர்பிடித்தேறுங்கனலைச்சொலிக்கின்ற சூலமு
ம்பல், விடர்பிடித்தேசெயும்பாசமுங்கைக்கொண்டி
கலிவந்து, குடர்பிடித்தேயுறுங்கூட்டைப்பிரிக்கக்கு
றுகுமன், பிடர்பிடித்தேதளச்செய்புலியூருடைப்பி
ஞ்ஞகனே. (உ௫)

காரணனே, நிணமெட்டுஞ்சூலப் படையுடையாயெ ங்கு நின்றபொழின், மணமெட்டுகின்ற திருப்புலியூ ரமர் மாத்தவனே. (கூ0)

மாத்தவனேபரமானந்தனேயயன் மாதவற்கு, மூத்தவனேயியல்பாகவலேக்குமம் மும்மலங்க, ணீத் தவனேஜகம்யாவையுமாக்கிநிறுத்திவைத்துக், காத் தவனேவளர்தென்புலியூருறை காரணனே. (கூக)

காரணனேபெருந்தென்புலியூர்க்கருணாலயனே யாரணனேயகண்டாகண்டனே யகிலாண்ட மெங்கு ம்,பூரணனேநன்னிலேயேமகிமைகொள் புங்கவனே, நாரணனேமுதலியாவரும்போற்ற நடிப்பவனே. ()

நடிக்கும் படிக்கழைக்கூத்தனைப்போலுனே நா டிமனம், பிடிக்கும்படிக்கருள்வாயடியேனுக்குப்பே ருழைக்குந், துடிக்கும்படிமக்கரந்தந்தவாவச் சுரர்க ளுக்கும், படிக்கும்படிகொடுக்கும்புலியூரமர் பண்ண வனே. (கூகூ)

பண்ணமருந்தமிழ்வாழ்புலியூர்கொள் பராபர னே, ண்ணமருநன்மணியேயினிக்குங் கனிகனியே, விண்ணமருவர்துதிநினைவாழ்த்த விரைந்தருள்வாய், வண்ணமருணகிரியார்மதுரநல் வாக்கினையே. (கூச)

வாக்குக்கரசுவெண்காடனைப்போல வளர்துற வு, மேக்குறுமாணிக்கவாசகனூரன்பும்வேணுபுரர், கூ க்குமஞானமுமாரூரர்நட்புந் தொடர்ந்தருளிக், காக் குதல்வேண்டும்புலியூரமரருட் கண்ணவனே. (௩௫)

கண்ணுதலேதென்புலியூரனே நின்கழற்பணிக ள், பண்ணுதலேயென்கடனீயடியனைப் பார்த்தளித் திங் கொண்ணுதலேநின்கடனுயிருக்கவு முள்ளத்தி ல்வே, றெண்ணுதலோவழகாகுமடிமைசெய்யேழை யந்கே. (௩௬)

ஏழையர்மையலில் வீழ்ந்தென்னுணர்வ திசை யக்கற்று, மோழையதாகி மூடிந்ததந்தோபொய்யர் மூடர்பெறுங், கீழைமருவியபேறத்தனையுங் கிடை த்திடுந்தீ, தூழைவிலக்கும்புலியூரமர்ந்தவுமாபதியே.

பதிகம்பலபுரிநால்வர்க்குமேலைப் பரமவின்பக், கதிகண்டுதந்தநடராஜனேசெங் கமலமலர், விதிகண் ணனேத்துந்திருத்தலம்யாவும் விரும்பவுயர், வதிகம் படுதிருத்தென்புலியூரம ரங்கணனே. (௩௮)

கண்விளையாடுநுதற்பரமாநற் கனகமலைப், பெ ண்விளையாடுமொருதிருப்பாகம் பிறங்குமரா, விண விளையாடுங்கடவுளர்போற்றிய வேதியனே, பண்வி ளையாடுந்தமிழ்ப்புலியூர்கொள் பகாப்பொருளே. ()

பொருவேயிலாதநற்றென்புலியூர்ச் செம்புளித வபூ, மருவேயெனவெனக்குள்ளேவிளங்கிமுன்வாழ வந்த, குருவேமெய்ஞ்ஞானவமுதத்தையூட்டுங் கு ணத்தனேயே, யருவேதிருவுருவேயடியேனுன்னடை க்கலமே. (௪0)

அடையேறுமேவுங்கொடிப்புலியூர்ப்பொதுவா டியவா, விடையேறுநாதமதிவாழ்சடைகொள் விமல வருட், கொடையேறுநற்கணனேபரமேட்டிபொற்கு ன்றவில்லி, மடையேறுமாக்கைதரும்வல்வினைகள்வ ரும்வழியே. (௪௧

வழுவறுமன்பரைக் கண்டான்மகிழு மகோததி போ, லெழுமருண்மேவிடுந்துக்கப்படுவர்க் கிரங்கியி டு, மிழுதையில்வீட்டினுயிர்களைச்சேர்ப்பிக்கவிச்சை கொளுஞ், செழுமைமிகுந்த புலியூரகின்றன் றிருவு ளமே. (௪௨)

உளங்கனியப்பர் சிரமேறுமன்பர்க ளுள்ளத்தி லே, விளங்குமலத்தையழுத்துமம்மாயன் விழியணி யுங், களங்கமில்வேதச்சிலம்பாருமின்னடங் காட்டி டுமாற், பளிங்கிலயோங்கியதென்புலியூரகின் பாதங் களே. (௪௩)

பாயும்ப்ரகாசவெண்கோவணங்களு பரிந்தணி யு, மாயும்புனிதநற்பட்டாடைபூண்டிடு மம்பரமாக், காயும்புலியதள்பூணும்புயங்கமென்கச்சணியுந், தாயு ம்பிதாவென்புலியூரனின்னணி தங்கிடையே. (௪௪)

தங்கமலையைக்குனிக்கும்பதுமன்றலைபிடிக்குந் திங்கமிகுமனலேந்துந்தெழிக்குந் துடிபிடிக்கு, மங் கலவன்பர்சிரமேறுமாப்பய மாய்க்குழமை, செங்க ரம்பற்றும்புலியூரனின்றன் றிருக்கரமே. (௪௫)

கருதியபொன்மலைதாங்குந்தனஞ்சயன் கன்று றவே, பொருதுந்தமையுணர்வோர் தமிழ்மாலைக்கு ப் பூரிக்குநன், மருமலர்மாலைசந்தேறகுஞ் சயம்பெ றுமங்கைதழூஉந், திருவளர்பொய்கைப் பெரும்புலி யூரனின் றிண்புயமே. (௪௬)

புயல்வண்ணனுமஞ்சு நஞ்சமுதாக்கும் புகழ் பெறுமை, யமுறவேற்குமரமாதர்மங்கல நாணளிக் குஞ், சயசாமவேதந் தொனிக்குநற்கண்டிகை தான ணியுந், தபவாருஞானிகள்சூழ்புலியூரனின் றன்கண் டமே. (௪௭)

பெயர்வாம்படியிற்றடுத்துளமுன்பதம் பெட்ப
லவத்து, மயர்வாம்படிதவிர்நின்சிர்த்திவாய்பண்ணி
ம் வாழ்த்தவுட, லயர்வாம்படிக்கிருகைகொட்டிக்கா
ம்பெயர்த்தாடலென்ரே, வுயர்வாம்படிபுரிதென்புலி
ூரகத் துற்றவனே. (ருசு)

உற்றூரையுந்தமைப் பெற்றூரையும்விட்டுறைப்பிரி
க,கற்றுவெனவுட்பதறிக்கதறிக்கணாந்துனது,பொ
ற்றுமனைப்பதஞ்சேர்ச்தாரறிவினர் பொய்யினில்யா
ா, பற்றுயலேந்தனனேபுலியூரொம்பரம்பொருளே. ()

பொருளேசிறந்திடுமாணிக்கமேயன்பர் போத
தில்வா- முருளேயமரர்சிகாமணியேமறை யந்தநட
, தெருளேபெரும்புலியூரவனேயென் திருத்தெய்வ
மே, யிருளேபெருகொளியேவெளியேயுள் ளிருப்ப
னே. (ருஅ)

இரும்பொக்குநின்னைவிரும்பிக்கனிவதில்லாம
னந்தான், பெரும்பொக்குநீக்குனைப்பாடாதநாக்கு
ப்பிறழ்துடுப்பாங், கரும்பொக்குந்தாள்வணங்காத்த
லை - நாடல்கழிபொறியா,மரும்பொக்குமூரலர்சூழ்பு
லியூரமரங்கணனே. (ருகூ)

கண்ணொக்குநின்றனைச் சூழாதகான்மரக் கால தொக்கு; மெண்ணொக்குநாசியுமையோடுனை யறியி ச்சையிலகண், புண்ணொக்குநின்புகழ் செல்லாச்செ வியறப்புற்றதொக்கும், விண்ணொக்குந் தென்புலியூ ரவனேபவம் வீட்டுவனே. (சூ0)

வீடொக்குநின்பணி யில்லாவுறுப்புகள்வீந்த மரக், கோடொக்குநின்னன்பர்மேவாதவீடுவெங்கூ விகள்வாழ், காடொக்கும்பத்தர்க்குதவாதசெல்வங்க டற்சலமா, மாடொக்குங்கொன்றை யணிபுலியூரெம் மகேச்சுரனே. (சூக)

சுருதிமுழங்கும்புலியூரமர்ந்துதுலங்குபரா, கருதிடுமுள்ளம்பிராணுதியாவுங்கழற்றியிரு, ளுருமட் நீக்கியெனைக்கண்டுனையுண ரதுணர்ந்து,மருவலில் லாதுமருவும்பொருட்டு வரம்புரியே. (சூஉ)

புரியார்கலியெறிதென்புலியூரநின் போதமறை, யிரியாச்சிலம்படிதந்தாய்மற்றென்றுமெனக்கருளை ன்,றரியார்கிடக்குந்திருவாயிற் கோயிலுளாயுனையா ன்பிரியாநிலையருள்வாயிதுவேயென் பிரார்த்தனையே

மேலாமதுரையில் வேதத்தருத்தம் விளம்புமந்
த, ாலாமுனிவர்க்கணிபாலின்கீழ்ச்சிவஞானஞ்சொ
லு மாலாலமுண்ணுங்கௌரிகையூட்டு மமுதருந்து
லாதரிக்கும்புலியூரரின்றிரு வாய்மலரோ. (௫அ)

மலர்தலையிவ்வுலகாதியெங்கேயும் வயங்கும்வ
கை, வலமறையாரின்றவாவினையவீசு மணத்தினைய
மிலகிடவேகண்டு கொள்ளுமுயரு மெழின்மருவு, ந
லமுறுமாகமம்வாழ்புலியூரரின் னுசிகையே. (௫௯)

ஏர்தருஞ்சீர்தருமொன்பான்மணிதரு மின்புத
ரும், பார்தருந்தேவவரசாதியதரும்பத்திதரு, நீர்த
ரும்யோகந்தருஞானமெய்தரு நிஷ்டைதருங், கார்த
ருஞ்சோலைப்புலியூரரின்றன் கடைக்கண்களே. (௬௦)

கட்செவிக்குண்டலம்பூணும்பணிந்து கனிந்த
தொண்ட, ரட்சரமாலைதரிக்குமறுமுக ளூர்மழலை, ப
ட்சமொடேட்டுமுறைகொளுங்கால பட்டர்கள்புரி, சி
ட் சவிலக் கும்புலியூரரின்றன் றிருச்செவியே. (௬௧)

செவிமுற்பொறியைந்தினுட்பட்டவர்க்குத்திரு ம்புவதாங், குவியுங்கருத்தன்பருக்கார்மதியிற் குளிர் ந்திருக்கு, மவிருங்கதிர்மதியங்கியைக் கண்ணென வாய்ந்துகொளுந், திவியத்தலமென் புலியூரநின்றன் றிருமுகமே. (ருஉ)

முகாரன்குடையவன்காணுமலோங்குமுழுவன் பரம், பகாடகிற்குஞ்சடைமாமகுடம் பரிக்குமதி,ம கநாகப்பூணுஞ்சுரநதிசூடு மலரணியுஞ், செகநாடியே த்தும்புலியூரநின்றன் றிருமுடியே, (ருந)

முடியாதபேரொளிவீசும் வெண்ணீற்றுண்மு ழுகுமிக, நெடிலாந்திசையெட்டுமுட்டித் ததும்புநி றையுமெங்கு, மடியார்மனத்திற்குடியாகுமானை யத டரிக்குஞ், செடிநீக்கிவாழும்புலியூரநின்றன்றிருவுரு வே. (ருச)

உருவத்துமாசை யறுத்திடுந் தீவினையோட்டு முள்ள, மருவச்சகலமைக்கேவலநீக்குமுன்னைக்கு மருள், பருவத்தின்முப்பொருள்காட்டுகின்றருளிற்ப தித்துவிடும், பொருவற்றிலங்கும் புலியூரநின்சிறப் புப்பெயரே. (ருரு)

பிராணன்பயிலுட்கரணம்புறத்திற் பிறங்குரு
வாய், கிராணஞ்செவிமுதல்யாவும்வசம்புரிகின்றவறி
வொராணம்பெறவருள்வாய்நீடேசவொலிமறையா
ய், பூர ணம்புகழுந்திருப்புலியூரிற் பொலிபவனே.()

பொலிபுலித்தாளர்சிறப்புலிகோட்புலி புல்லவை
த்தாய், வலிவட்புலிதிரிகைப்புலிபாய்புலி மன்னி
வினம், புலியெட்டுகொனிற்புலித்தேம்புகவரும்போ
கரும்வீ, டொலிபுலிக்கேதனனுட்டிற்றிகழ்புலி யூர
வனே. (சுரு)

அவத்தைவிலக்குஞ்சிதம்பரந்தில்லையென் றும்
பெயர்கொள், பவத்தைவிலக்கும்புலியூரில் வாழும்
பராபரமே, சிவத்தைவிளக்கு மறைக்கொழுந்தேநற்
செழுஞ்சுடரோ, தவத்தைவிளக்குமுன் பாதாம்புயங்
களென் றன்றுணையே. (சுசு)

துணைதீருநற்புகழ் சேர்புலியூரிற்றுலங்குமரா,
வணைதீரும்வெள்ளமெனவாழருட்கரு மானந்தனே,
பிணைதீருநீயொருகூத்திரதாரி யியன்றவுயிர், திணை
நம்யாவ ருபாவைகண்டாயென் செயலில்லையே.

செய்யார்திருத்தென்புலியூரில்வாழுஞ் செழுங் கனலங், கையாரெந்தாய்சிவகாமியுநீயுங் கருணையு டன், மெய்யாகவென்சித்தம்வந்துறலாலினி மேவு மெலாம், பொய்யானவைகெடும்யாதோவரிதிதுபொ ய்யலவே. (சுஅ)

பொய்யோசொலவெனிலுவாயிரமொக்கும் பு ண்ணியர்முன், மெய்யோவுரைக்க வெனினூமையா கும் விதரணத்திற், கையோமுடங்கிடும்வாங்கிட நீ ளுங் கடையடியேற், கையோபிழைப்பெப்படிபுலியூ ரம்பொன் னம்பலனே. (சுகூ)

அம்பதினும்விரைவுண்டாய்நடக்கு மவலமெ ன்றூற், கம்பமினன்மையிற் சப்பாணியொக்குமெ ன்கால்விழியுன்,செம்பதநோக்கவென்றூற்குருடொ த்திடுஞ்செல்லும் பெண்மேல், வம்பலயான்சொல் வதுபுலியூருறை வண்மையனே. (எ0)

வண்டாட்டமாய்த்திரிதொண்டேன் மனத்துக் குவம்பனென்றூற், கொண்டாட்டநல்லவர்வந்திடிற்ச ங்கடங் கோட்டவினை, திண்டாட்டநீக்குந்தவமெனி லோநஞ்சுதீச்செயல்கற், கண்டாட்டமாயிருக்கும்பு லியூரம்பி காபதியே. (எக)

பதக்கலந்தாதென்புலியூரனேநிதம் பண்ணுதவ
த், திதக்கலந்தாக்குமகங்காரமீனங் தெளிவறனீ, ரித
க்கலந்தாழ்கொங்கையாராசைதீவினை யேற்றுசிந்தை
த், ததக்கலந்தாபத்திரையார்பவக்கட ருண்டிடவே.

இடர்புரியாசையினலேபெருமத் திடுதெயிர்போ
ன், மடமாரடியன்கலங்கித்துயர்ந்துபின் மாழ்கின
ன்ற், கடல்சூழுலகினிலென்போற்றுயர்பிறர் கண்ட
வரார், சுடர்மணிமாடந்திகழ்புலியூருடைத் தொன்
மையனே. (எ௩)

தொன்மையதாம்புலியூராவெறும்புகள் சூழவு
ற்ற, புன்மையதாகியநாங்கூழெனவரிப்புண்ணுகிறே
ன், வன்மைகண்மேவுங்கருவிகளாலென்று மாதவர்
தா, னன்மைகளாங்குணந்தாமெப்படியெனு ணண்
ணுறமே. (எச)

நண்ணும்பெருமைத்திருப்புலியூரநடுவெலியி,ல
ண்ணும்புழுவெனத் தீவினையானின்றழுங்குகிறேன்,
மண்ணுறுமாநிலத்தேயடியார்க்கு வழங்கியவத்,தண்
ணுறுநல்லருளிற்சிறிதாயினுந் தந்தருளே. (எரு)

அருடான்ற ராமலிருந்தாலுமுன்னை யகலுவ
னே, பொருடான்கொடாதிருந்தாலுமிருந்த செம்
பொன்னுடையார், வருவாயில்காத்திங்கிருப்பர்கண்
டாய்வறியோரதுபோன், மருவார்மலர்ப்பொழில்சூ
ழ்புலியூரில் வளர்பவனே. (எசு)

வளர்புலியூரபுகழ்தலிகழ்தலெம் வாய்வழக்கங்,
குளநேரருள்சற்றுமீயாதிருக்கிற் குறைமதிய, னிள
மானிடன்மெய்வெளுப்பவனுட்டை யெடுத்தகருங்,
களவனெய்த்தோலன்குணமிலியென்று கழறுவனே

கழைகழையென்னவளர்புலியூரிற் கனகசபைப்,
பழையவனேதனித்தானத்திருக்கினும்பாழ்மனந்தா,
னுழைநரிபோல வெளியேவிடுமெனை நோக்கியதை,
முழையிலுறங்குமதுபோலிருக்க முடித்தருளே. ()

முடியாதவாழ்வுதரும்புலியூரெம் முழுமுதலே
யடியாரனுபவங்கூறுதல்வேதமொ டாகமம்பல், ப
டியான்முழக்குதல்கேட்டும் பதாம்புயம் பற்றுற
வே, பிடியாதவிக்கொடும்பாவியெதற்குப் பிறந்த
னனே. (எகூ)

பிறங்குமுலகம்புகழ்புலியூர்ப்பர பிட்டமதை, யுறங்கெனவேதட்டத்தட்டக்கிளம்பியுறுமகப்போ, லறங்கழி போதத்தைநோக்கித்துரியத் தணைந்துசும் மா, விறங்கியுறங்கச்சொலச்சொலமேலெழு மென் செய்வனே. (அ௦)

செய்குதல்செய்விக்குதலறுங்காந்தச் சிலையத ன்முன், வயகுமிரும்புகள்சேஷ்டித்தலென்ன வளரு முன்மூ, னுய்குதல்செய்யைக்தொழிலெழவாழ் புலி யூரவனே, மொய்குறைவேனுளங்தோன்றிடு மெண் ண முடித்தருளே. (அ௧)

அரியபொன்னேருமூஞ்செய்ப் புலியூர்ப்பொது வாடியவா, கரியறிவாகிவிளங்கிடுமென்னைக் கனங் கொள்பெரும், பெரியவறிவுருவாகியவுன்னிற் பிறங் கவைக்க, வுரியதல்லாமற்சடத்தொடுகூட்டு மொழு ங்கதென்னே. (அஉ)

ஒழுங்கறியாதுறுசிற்றறிவாளர்க் குரைத்துநன் மை, யெழுங்கருத்தாக்கிவிடலேபெரியர்க் கியல்பது வா, மழுங்கமலத்தெனைக்கூட்டிவருத்த மமைத்தன ன்றே, செழுங்கமலத்தடஞ்சேர்புலியூர்ப்பெருஞ் சி ற்பரனே. (அ௩)

பரிவுறுமன்பர்கள்பாவமழித்தலிற் பல்கொலை யன், கரிசுறுதியர்க்கிரங்காமையானங் கருணையில், னிரிவறுஞானிவினையைமற்றோருக் கிடலினெறிக், குரியனல்லோனெனவாயினைநீபுலி யூர்க்கிறையே. ()

இறகார்கிளிப்பரியோன்மலர்தூவ வெரித்தத னுன், மறமார்கொடியனுங்கல்லெறிந்தார்க்கு வரந்த ஈலா, லறியாதபித்தனுமஞ்ஞானமொன்றறி யாமை யினுற், பிறியாமடவனுநீபுலியூரெம் பெரியவனே. ()

பெரியார்களுளும்புகழ்புலியூர்கொளும் பிஞ்ஞ கவுள், ளெரியாம்வடவையுந்தூராதகுக்கி யெனுமவ லு, மரியாவிடர்ப்பலநோயாஞ்சலமு மருவுடலா, மி ரியாக்கடறள்ளிவைத்தாய்கரையிலென் றேறுவனே.

வளமுறுநல்லபுலியூர்ச்சபைநட மன்னவனே, யணலெனுங்கோபப்பெருங்குமகங்கர மாமலையும்,ப ணவருகாமவகலமுந்திமையென் பள்ளமுமார், சன ணத்தனுநெருப்பாற்றில்விட்டாயென்று தாண்டுவ னே. (அஎ)

தாண்டவஞ்செய்யப்புலியூர்ச்சபையைத் தகுமி டமென், ருண்டவனேயுண்மலமாமிருளு மஞர்வி னையா, மேண்டளைழகுப்பையுங்காமாதிகளெனு மீ வகையு, மீண்டியதேகச்சிறைமூட்டினைவிட லெத்தி னமே. (அஅ)

எத்தினமூந்திகழ்தென்புலியூர வினக்கருவி, வி த்தியைதாருவுங்காமாதிதுஷ்ட விலங்குமடர், தொத் திடுமாயைவனத்தறியாமைத் தொடர்தளைத்துக்,கத் திடுமென்னைக்கிடத்திணையென்று கடப்பிப்பையே.

கடவாதகாமக்கடலுமகந்தைக் களஞ்சியமு, ம டமைவையேற்றுங்கலமும்பெரும்பொய் மமதைவித் து, மிடர்விளைபூமியுமாயினனேயென்னி லெப்படி தான், சடமறுஞானமூண்டாம்புலியூரொஞ் சபாப தியே. (கூ0)

பதிவிசுவாச மறையோர்கணிசர் மதியினிலே, வதியார்கள்போல வராகங்கொலைமை மடமுதலாப், பொதிவாகுமென்னுளநீவீற்றிராயென்று புந்திகொ ண்டே, னெதிறலினியுய்குவேன் புலியூருறையெந் தெய்வமே. (கூக)

மேலேறலைபுரியாற்றினிடிகளை மேவுமரம்,போ
லேயிருக்குமுடம்புநிலையென்று புந்திகொண்டு,கோ
லேகிகரும்விழியார்நிலம்பொன் குறித்தலைந்தேன்,
பாலேநிகர்பொடியாய்புலியூரருட் பத்திரனே.(கூஉ)

பத்திரமாதிபலகொண்டுபூசைப் பணியியற்று
ப்,புத்தியனேநின்றிருப்பதங்கூடிப்புணர்வுறுவேன்,
வித்தியுறுமருளாற்கூடவேண்டிடும்வேறுமுண்டோ,
வுத்திகொணூல்வலர் சூழ்புலியூர்ப்பொது வுற்றவ
னே. (கூஙு)

உற்றாரைநம்பில னூராரைநம்பில னுள்ளபடி,
பெற்றாரைநம்பிலன் பிள்ளையைநம்பிலன் பேசிடுநூ
ல், கற்றாரைநம்பிலன்மற்றோரைநம்பிலன் காணுன
டிப், பொற்றாமரைநம்பினேன்புலியூருடைப் புண்
ணியனே. (கூச)

புண்ணியமார்க்கஞ்செலுத்திடில்யாவர் புகாத
வரோ, வண்ணியநீயறிவித்திடில்யாரறியாதவரோ,
வுண்ணியதந்திங்கருத்திடில்யாவருணாதவரோ, நண்
ணியநீயுளாயாய்புலியூரெங்க ளுயகனே. (கூரு)

நாடிற்றிலேனடி நம்புகிலேன்வந்து நண்ணுகி லேன், றேடிற்றிலேனன்பிற்பாடிற்றிலே னுனைச் சி க்கத்திலெ, கூடிற்றிலேன்மிக்க வாடிற்றிலேனன்பர் கூறுபணிக், கோடிற்றிலேன்விழலுக்கிறைத்தேன்பு லி யூரவனே. (கசு)

அவமேவுமூல மலப்பேய்புணர்ந்திங் கறிவிழந் து, பவமேவினைனினியாயினுமேழையைப் பார்த்த ருளித், தவமேவுஞானமெனும்பெண்புணர்த்திச் சக சமுடன். சிவமேவ நீயருள்வாய்புலியூருறை தேசி கனே. (கள)

தேசாசரணங்கிரிசாசரணஞ் செகமெவைக்கு, மீசாசரணஞ்சபேசாசரண மிடங்கொளுமை, நேசா சரணநடேசாசரண நிகழ்புலியூர், வாசாசரணஞ்சர ணஞ்சரண மதுமலர்க்கே. (கஅ)

மதியாப்பிழையும் பணியாப்பிழையும் வளருநி ன்சீர், துதியாப்பிழையுங்கனியாப்பிழையுந் தொடர் ந்துனையுட், பொதியாப்பிழையு மற்றெல்லாப்பிழை ம் பொறுத்தருள்வாய், திதியாப்பிழைதவிர் தென்பு லியூருட் செங்கதிரே. (கக)

செங்கொடைமேவுநின்றென்புலியூர்வெல்க சீர்கள்வெல்க, பங்கொளிர்நல்லருள்வெல்கமன்றானறிய பாதம்வெல்க, வங்கொடமைசெங்கரம்வெல்க வெல்கவலர்முகமெய்ப், பொங்கொளிதான் வெல்க வெல்கவெடுத்திடும் பூம்பதமே. (ரு)

புலியூரந்தாதி முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## அன்புறுமாலை.

கலிவிருத்தம்.

சுத்தமாநிகழும் பரஞ்சோதியே
முத்தமாநிறை யுஞ்சிவமோனமே
புத்தமாரு ளன்பர்கள்பூதியே
சித்தமாரொரு சிற்சபைத்தெய்வமே. (க)

மேயபொன்னம் பலத்துள்விளங்குறுந்
தூயஞானச் சுடரொளியேயருட்
டாயமர்ந்தபங் காளதயாநிதி
காயமாதி கடந்தொளிர்கர்த்தனே. (உ)

அஞ்செழுத்துணர்ந் தோதியதிதமாய்
விஞ்சிநின்றவர் மேவுவனென்பது
பஞ்சவக்கரப் பைம்படிமேனடஞ்
செஞ்செவேசெய்து காட்டிடுஞ்சிவனே. (௩)

தேகமாலய மாருயிர்சிற்சபை
வேகபோத மிலிர்ந்தமுயலக
ஞகவேநடஞ் செய்தறிவித்திடேன்
சோகமோகந் தணியச்சுயம்புவே. (௪)

நெஞ்சமார நினைக்கவுனகழ
லஞ்சுறேலென் றருளொடும்வந்துதாட்
கஞ்சமீகுவை கன்றினுக்கானெனப்
பிஞ்சுமாமதி சூடும்பெண்பாகனே. (௫)

கடவுளென்றுனைக் கண்டிங்கடைந்துமிம்
மடமையென்னை வருத்தன்முறைமையோ
படருமாயைக் கதீதபராபரா
சுடருஞான சிவானந்தச்சோதியே. (௬)

திண்மைமாயை நிகழ்த்துஞ்செயலினு
லெண்மையாகி யிளைக்கின்றவேழையேற்
குண்மையாக வொருமொழியோதுவை
பெண்மையாதிப் பிரான்சிற்சபேசனே. (௭)

தெய்வமாக்கரு ணைக்கடலேசெழுஞ்
செய்யபாத மனத்துளுஞ்சிந்தியே
னுய்வதொன்றுளா யாடினுறும்பணி
செய்துமுத்தி பெறுவதுதிண்ணமே. (அ)
பித்தனுக்கி யலேவிக்கும்பேய்நெஞ்சே
சுத்தமாக்குஞ் சிவனடித்தொண்டுற
மத்தம்விட்டுத் திரும்புவைமாய்விலிச்
சித்தவின்பம் பெறுகுவைதீர்வையே. (கூ)

சித்தமாகமை யாட்கொளநின்றசீ
ரத்தனார்பதத் தன்புடனிற்றியே
வித்தைக்க ணுவமையுனக்கிலென்
றெத்தினத்திலுங் கூறுவனென்னெஞ்சே. (ய)

தீர்ந்தமார்க்கந் தெளிவுறச்செப்புகேள்
கூர்ந்தவேல்விழி மாதரைக்கூடிடா
தார்ந்தசெஞ்சடை யப்பனடியிணை
சேர்ந்துநிர்ச்சல மாயிருசித்தமே. (கக)

சோதிநாதன் றிருவடித்தூமலர்
நீதியோடு நினைத்திலேநெஞ்சமே
பீதியாகி புரியும்பெருஞ்சமற்
கியாதியம்புவை கூறுதியென்முனே (கஉ)

அட்டமூர்த்தி செம்பாதமணைந்துறீஇ
முட்டிலாதவ னுதியமுன்னிலைச்
சுட்டொழிந்திடு நன்னலந்தோயலாங்
கட்டமும்மிலை கண்டுகொணெஞ்சமே. (கங)

உன்னையன்னிய னென்றுமுலகத்து
ளன்னமென்னடை மாதரையாருயி
ரென்னவுமுனச் செய்கின்றதேமலம்
பின்னையென்னிற் பிழையிலைபெற்றனே. (கச)

காயமியானெனுஞ் சிந்தையுங்கன்மத்து
ளேயகாதலு மாக்குமிருண்மலந்
தேயவேயருள் செய்துசிரத்தினிற்
றூயசேவடி சூட்டுசுயம்புவே. (கரு)

பாலடுத்த வரைக்கொலியாப்பகர்
கோலநின்கைத் தழறகிக்காதுகொன்
மூலமாமலக் காட்டமுழுமையுங்
காலவக்கினி ருத்திரகர்த்தனே. (கசா)

சிற்றினங்கள் செறிவுறச்செய்தலும்
பற்றிநின்று குலஞ்சொலப்பண்ணலுஞ்
செற்றகன்மங்க ளேயெனைச்சிறிடே
லற்றவர்க்கரு ளம்பலவாணனே. (கஎ)

பூமலர்த்திருப் பாதம்புகாவணங்
தீமலத்தி னழூத்தல்செருக்கிகழ்
வாமவைக்கு மிடந்தாலார்வினை
காமமுங்கெடச் செய்வைகடேசனே. (௧அ)

ஏறுவெண்பட மீதழுக்கேயென
ஏறுகன்மநெருப்பை யெழிற்சடை
ஏறுகங்கை யவித்திலையிதென்ன
ஏறுவாழ்வுற வேறியவெந்தையே. (௧௯)

தோன்றுகன்ம மூயலகன்றுஞ்சுற
வூன்றுபாத மிதிக்கவொணுதுகொ
லான்றவின்பதத் தன்பொடருச்சனை
தான்றழைத்திடச் சங்கரசம்புவே. (௨0)

தேகமாதிய வாய்நின்றுதேசிகன்
பாகமாக்கும் பதங்கள்வணங்கயா
னேகினுண மியற்றுவதிங்குறீஇ
மோகமாயையென் செய்குவன்மூலனே. (௨௧)

நாமரூபங்க ளாகிநலிவுசெய்
வீமமாயைகள் வீழ்வுறச்செய்குதி
தூமலர்க்கழ னம்பியபுன்மையேன்
சேமமேவும் படிக்கருட்செல்வனே. (௨௨)

விறலிலெலென்னறி வென்னுமுனிவன்மேற்
கறுவுமாயை யெனும்பெருங்காலன்மாய்
வுறவெடுத்த பதத்தினுதைத்தரு
ளறம்வளர்த்தவள் பங்குறுமையனே. (௨௩)

பித்தனேயெனப் பேசும்வன்றெண்டனூர்
வைத்தவெண்ண முடித்தனேவள்ளலே
சுத்தனேயெனக் கூறியுந்தொண்டன்மேற்
சித்தநீயிரங் காததுசெவ்வையே. (௨௪)

நிந்தியேன்பொய்ச் சுகநினைவாழ்த்திலேன்
வந்தியேன்மலர் கொண்டுன்மலரடி
சிந்தியேனுன்வடிவஞ்சிறுமைசேர்
புந்தியேன்பிழை நீத்தருள்போதனே. (௨௫)

மொழிவதுன்செப முன்னனின்சிந்திப்பென்
றெழில்கணின்றெழில் காணனிற்காண்பதா
நிழல்செய்யுள்ளத் தடைத்திடினீயெற்குன்
கழல்கிடைப்பது திண்ணங்கருத்தனே. (௨௬)

எனதியானென வெண்ணியவென்னுளம்
வினவிலேழ்பிறப் பாகும்வியன்கட
றனிலழுத்துமென் றஞ்சினன்றஞ்சமென்
றுனையடைந்தனன் காத்தருளும்பனே. (௨௭)

இரும்பைக்காந்தம் வலித்திழுத்தாலென
வருஞ்சுயம்பிர காசவடிகளாக்
கருங்கனெஞ்சனை யாட்கொள்கருணைக்குத்
தருங்கைமாறுள தோசிற்சபேசனே. (உ௮)

ஒப்பில்வேதச் சிரத்தொளிருன்பதத்
தப்பிலுப்பென வத்துவிதம்பெறப்
பொற்பினைந்தவ னுக்கிரகம்புரி
யெப்பில்வைப்பி லிலங்குறுமீசனே. (உ௯)

ஆமைபோலைந் தடக்கிச்சித்தாகயான்
ஆமைபோலுண் ணினைந்தருள்செய்குவை
ஆமைபோல்வடி வாமச்சுதன்றொழும்
ஆமைபோற்புறந் தாளுமைக்கன்பனே. (௩0)

வேட்டுவன்றனைக் கன்டுவினையினேன்
பூட்டுமெய்ச்சிவ யோகம்புரியும்போ
தாட்டுகின்றதவ் வூழதறச்சுட
ரூட்டுகுட னெனச்செய்வையும்பனே. (௩௧)

எயவின்னு மிரங்காமையாதினுற்
பேயன்மீதிற் பிழையிருக்கின்றதோ
மேயவன்றொண்டர் முற்சொல்விருப்பமோ
வாய்மலர்ந்துரை யம்பலவாணனே. (௩௨)

பஞ்சாத்திடைப் பட்டவிலங்கெனப்
பஞ்சகோசக் குகையகப்பட்டுத்துன்
பஞ்சகத்துழல் வேன்பெறல்பண்பதோ
பஞ்சலர்க்கிடர் தீர்த்தபரமனே. (௩௩)

கங்குலும்பக லுங்கடந்தோர்நிலே
தங்குநிஷ்டை புரிந்ததவர்க்கலா
திங்கிலங்குண்டென் ஞேடுவர்க்கெட்டிடா
வெங்கும்பூரண மாகியவின்பமே. (௩௪)

குடும்பபாரந்தலேக்கொண்ட கொள்கையா
லிடும்பைகொள்கல மாயினனேயினி
யுடம்பெனப்பம் றறச்செய்தியுன்னன்பு
நெடும்பணப்பணி பூண்டநிமலனே. (௩௫)

வாயினுற்கிண றுகெட்டவாறென
வாயினேன்புவி மீதிலலேவுற்றேன்
கூயினேயெனே யாண்டுகொள்வாய்குணத்
தாயினும்பெரு கன்புறுதந்தையே. (௩௬)

ஊரும்பேரு மிலாநிலேபொன்றியான்
ஊரும்பேரு முருவுமொழிக்கநீ
ஊரும்பேரு முருவுங்கொண்டாண்டனே
ஊரும்பேருங் கடந்தொளிரும்பனே. (௩௭)

உணருஞ்சித்தது நீயுணர்விக்குஞ்சித்
திணையில்யாமென வோதினையென்னறி
வணையவின்றுன் னருள்கொண்டணையச்செய்
குணமுடனரு ளம்பலக்கூத்தனே. (௩௮)

கைத்தனின்மணி யின்னெனைக்காட்டியே
மொய்த்திடாணவ மூடத்தழூந்திய
தொத்தியானருட் டுவெளியூடுற
வைத்தல்வேண்டு மகாகயிலாசனே. (௩௯)

நந்தியாதி சிவகணநாதரும்
வந்தியாநிற்க மன்றின்மகிழ்வுட
னந்தியாநிறத் தண்ணல்செயுநடஞ்
சிந்தியாநின்று தாழ்ந்திருசித்தமே. (௪0)

கொன்றைமாமலர் சூடிநடங்கொடு
மன்றின்மேவுஞ் சிவபெருமானடி
யின்றுசிந்தனை செய்வையேலியாவரு
மென்றும்வாழ்த்த விருப்பையிதயமே. (௪௧)

ஒளிருநின்முன் றழுதழூப்புற்றநாப்
புளகிதாங்கம் புரண்டெழுநீர்விழி
தளருநன்னெஞ்ச மாய்நிற்கச்சற்றுநீ
கிளர்கடைக்க ணருள்செய்கிரீசனே. (௪௨)

என்னிணைக்கை யிருகமலங்களு
முன்னிடுள்ள மரையுமுகமதிச்
சன்னிதிக்கட் குவியாததென்னசாற்
றின்னிலாவுறுஞ் செஞ்சடையீசனே. (௪௩)

எவிற்கல்லை யெறியத்தயைசெய்தாய்
பூவைத்தூவப் பொடித்தனையாதனிற்
காவதைக்கண் டியற்றவறிவிலைக்
கூவியாள்வதுன் பாரங்குணக்குன்றே. (௪௪)

சூத்திரன்கரத் தன்றித்துடிக்குமோ
கூத்துப்பாவைய தென்னவினைகள்கொண்
டார்த்தெனைப்பிடித் தாட்டுவையாதலின்
பூத்தவென்றொழி லின்னதுபுங்கனே. (௪௫)

சருவமுஞ்சிவ மென்னத்தனிமறை
பருவமில்லவ ரல்லவென்பாரதைப்
பொருளதாகக் கருதுறுபோதம்போய்த்
தெருளதாகிடச் செய்வையமலனே. (௪௬)

செறியத்தீபஞ் சிதையுமிருளென
வறிவதாகி நிலைக்கவறிவின்மை
சிறிதுமின்றெனச் செப்பினையங்நெறி
பொறியிலேனணை யச்செய்புராணனே. (௪௭)

சுற்றியைந்த கறங்கெனச்சூழ்சகம்
பற்றியிங்குழல் கின்றவிப்பாழ்மன
மற்றிலங்கு அரியத்தணேவனே
வுற்றினன்கட் கதிரொனவும்பனே. (சஅ)

சகலகேவல மாம்பகல்சாரிரா
வகலநீக்கி யுணர்வினடைவியும்
பகலிராவு மிலக்கிடும்பண்புசெய்
நகலுஞான பயனயனங்களே. (சகூ)

பிரியவென்னை யலைக்கும்பெருங்காம
மெரியுமாறு புரிந்திலையீதென்ன
திரியும்வல்லமைக் காமனைத்தீக்கிடு
மரியதாமெய்ஞ் ஞானவழற்கணே. (ருo)

கோதிலுண்மையோர் வாக்கியங்கூறுதற்
போதமற்றுறு போதவனுனெனும்
பேதமற்றொளி ரும்மெனப்பேசிய
சிதகற்றிரு வாக்கெனுஞ்செல்வமே. (ருக)

பற்றுடன்புக லும்விண்ணப்பத்தினைச்
சற்றுமேற்றுக் கொளாவகைதக்கதோ
குற்றநீங்கிய நால்வர்சொலுட்கொண்ட
செற்றநீங்குந் திருச்சிரவங்களே. (ருஉ)

மேவுமாதர் விழிநஞ்சடர்ந்துமேற்
ருவிடாதெனைக் காத்தருள்வாய்சற்றுந்
தேவராதி யெவருந்திகழ்ந்துறக்
காவல்செய்திடு நன்னீலகண்டமே. (௫௩)

எனக்கியாரு நிகரிலையென்றன்ப
ரினத்தைத்தூடித் தவமதித்தென்மன
வனத்துலாமத மாவையுரித்திடு
சினத்தியானை யுரித்தசெங்கைகளே. (௫௪)

வேதமாகம மேவுஞ்சமரச
போதவாசக மென்னுட்பொறித்திடு
வாதமற்றெளி ருந்திருவாசகன்
காதலாவெழு துந்திருக்கைகளே. (௫௫)

நெறியதாக நினைநினைக்கின்றவிச்
சிறியனுள்ளமென் செங்கமலத்தினை
யறியுநீமிதிக் காமையழகிதோ
செறியும்வேதச் சிரத்துச்செம்பாதமே. (௫௬)

மும்மலங்க ளெனும்பகைமூட்ர்க
டம்மதங்கெடச் சூலந்தாக்காதுகோ
லம்மையாளைப்பவ் கொன்றிலணைத்துறுஞ்
செம்மலேகரு ணைப்பெருந்தெய்வமே. (௫௭)

ஆனையீருரி போர்த்தாடுநீயென
தூனுடம்புபோர்த் தாடவொணாதுகொல்
வானம்வாயு நெருப்பறன்மண்ணொடு
பானுவிந்துயி ராகும்படிவனே. (ருஅ)

என்னைப்பெண்ணுரு வாகச்செய்யென்கிலே
யின்பச்சம்பந்த ரென்னவென்புன்புல
னன்புலனாகச் செய்யெனுநாயினேற்
கன்புதந்திலை நீதியென்னையனே. (ருகூ)

தெப்பமாக்கல்லைச் செய்யெனக்கூறிலே
யப்பனென்னப்பொய் யைம்புலமாகின்ற
வொப்பினீரி னழுந்தாமலுள்ளமி
தப்பச்செய்யெனக் கூறினன்சம்புவே. (சு0)

கராவிழுங்கு மதலையைக்கான்றிடப்
பராவுசுந்தரர் பாடற்கிரங்கினை
விராவஞ்ஞானம் விழுங்கறிவைத்தரத்
தராததுந்தயை நீதங்கொல்சம்புவே. (சுக)

இங்குவைத்த தெடுமென்றுரைக்கவுந்
துங்கநற்பதஞ் சூட்டினைதொண்டர்க்கு
மங்குமென்சிரஞ் சூட்டெனவாழ்த்தியுந்
தங்கநீயரு ளாததென்சாமியே. (சுஉ)

கரியைமாப்பரி யாகநடத்தின
தரியதன்றி யெனையருளாக்குதல்
பெரியதன்றரு ணோக்கம்பெருக்குநீ
புரியுமீனெனச் சைவபுராணனே. (௬௩)

வலியப்போய்வாத வூரரையாண்டனை
வலியத்தொண்ட னெனவந்துமாண்டிலா
யலியொடாண்பெண் ணாகிலமுமாகியவ்
வலிகளாதிய வல்லவாமையனே. (௬௪)

ஆர்கல்யாணமென் றேயழைத்தன்பரை
ஆர்கல்யாண மளித்தவர்ஞானமும்
ஆர்செங்காவுக் காசின்றுறவுநீ
ஆர்தரப்புரி யேழையர்க்கப்பனே. (௬௫)

நாதராகிய வாரூர்நட்பது
மோதுவாத புரீசர்தம்முள்ளன்பு
நீதமாவெனக் குற்றிடநீநினை
போதமுத்தி யளிக்கும்புராணனே. (௬௬)

நன்மையார்பல நூல்வலர்நல்லவர்
நன்மைஞானி யிலாத்தலரோர்மனந்
தன்வயத்தலை யாதுமச்சாற்றுவாய்
தன்வயத்தவ னாகியசம்புவே. (௬௭)

காயுஞ்செங்கதிர் நீங்கியகண் ணுல
காயினேனுன் னருளணையாமலே
மாலையபால்வரும் யாக்கைமன்னுதொளிர்
தூயமேனிய னுகுஞ்சுயம்புவே. (சுஅ)

பயன்செயேதுபற் றுதிவணேடிடுவ்
கயச்சுவான மெனக்கடிதேயலேந்
தயர்ந்தனனுனக் கன்புசெய்யாயலே
யியற்கைஞான முடையவெம்மீசனே. (சுக)

வெற்றுமண்ணெடுக் குங்கரம்வெட்கவே
பற்றுபாசக் குடும்பபாரஞ்சுமந்
திற்றிளைத்தும் விடுக்குமுணர்விலேன்
முற்றுணர்ந்தவ னுகுமுதல்வனே. (எ0)

காசநீங்கிய கண்கதிர்கண்டிடு
மாசைநீங்குயி ரண்டனேக்காண்மெனப்
பேசுமுண்மை யுணர்ந்தும்பேயாயினேன்
பாசநீங்கு மியல்பிற்பரமனே. (எக)

நதியின்மார்க்க நடந்துகடற்புகுங்
கதிகொணீரெனக் காதனெறிச்சென்று
புதியசென்மம் புகாவகைபோதிப்பாய்
முதியபேருண் மேவியமுத்தனே. (எஉ)

முடிவிலின்னலஞ் ஞானமுகிலினுன்
முடிவில்காலங்கண் மூடிபட்டேனினி
முடிவின்ஞான மருத்துவைமொய்த்தருண்
முடிவிலாற்ற னிறைந்தமுநிவனே. (எங)

வரம்பிலாவெறும் புள்ளினுங்கூழென
வரம்பில்காலமைங் கோசத்துண்மாழ்கினேன்
வரம்பிலின்பத் தினிவைத்துக்காத்தருள்
வரம்பிலின்ப நிறைந்தமகேசனே. (எச)

அரும்பெறற்கொரு யாக்கையைப்பெற்றும்யான்
பருங்கல்லாவற ளாங்குளப்பட்டவெம்
மரந்தமக்குமொப் பாயினன்மன்னருள்
சுரந்தளிப்பை யுயிர்க்குத்துணைவனே. (எரு)

இச்சகத்துட் கருடனையெண்ணவே
வைச்சகத்துள் விடங்கெட்டுமாய்தல்போ
னச்சியச்சிவ நாமெனப்பாவிக்க
நிச்சயம்மல நீங்கிடுநெஞ்சமே. (எசா)

பொன்மயக்கிரி சாரும்புன்காக்கையும்
பொன்மயந்தனைப் பூண்டுறுபெற்றிபோற்
சின்மயந்தனைச் சிந்திக்கச்சிந்திக்கச்
சின்மயம்பெறு வாயுண்மைசித்தமே. (எஎ)

கண்ணிலாதவர் செம்பொருள்காண்பரோ
லண்ணலார்வடி வைச்சிந்தியாதவ
ருண்மையாகிய முத்தியுறுவரோ
திண்மையாகிய வென்றுணேச்சித்தமே. (எஅ)

வெய்யகாம வெகுளிமயக்கமு
மையநின்னரு ளாட்டம்புரிந்தரு
ளுய்வனுண்மை யுரைத்தனன்சிற்சபைச்
சைவஞான நடம்புரிசம்புவே. (எகூ)

அறிவெனுந்தனு வாங்கியருளதா
மெறியுமம்புகொண் டேய்விடயங்களாஞ்
செறியுங்கானஞ் சுழலுஞ்சிறுமன
மறியைக்கொல்வதென் றேழையன்வள்ளலே. (அ0)

கட்சலத்தினைப் பற்றிநற்கங்கைதோய்ந்
திடல்விடுப்பவ னென்னச்சரியாதிப்
படராமூந்திமெய்ஞ் ஞானப்பதத்தையான்
விடலிலாவணங் காத்தருண்மெய்பனே. (அக)

நேசித்தைந்தெழுத் துள்ளிநெஞ்சமு
மாசிலாத்துதி சொல்வதில்வாக்கதுந்
தேசிகன்பணி செய்வதிறேகமும்
வீசுவர்க்கட லொக்கும்விடங்கனே. (அஉ)

வாளிலங்குமெய்ஞ் ஞானமதகரி
தாளிருத்திச் சரித்தலிலுள்ளமு
மீளியக்கம் விபூதியிலங்கமுங்
கோளிலாப்பொறி யொக்குங்குணக்குன்றே. (அ௩)

நலமொடையமிட் டுண்டிலனுனிலத்
துலவுமன்பர்க்கொன் றீந்திலனேங்குறும்
பலமிலாமர மொத்தனன்பாவியேன்
பொலம்பொறுத்தருள் சைவபுராணனே. (அ௪)

சுடர்த்தஞானச் சுருதிகளோதியுங்
குடத்துத்தீபத்தின் கொள்கையதாகினேன்
றடத்தினுச்சிசுற் றீபத்தின்றன்மையாத்
திடத்தினல்லறி வோங்கச்செய்சித்தனே. (அ௫)

குருப்பிரான்பதங் கூடிக்கிடப்பனோ
விருக்குமெய்ப்பொரு ளெய்தப்பெறுவனோ
வருட்கணன்பர்க் கடிமையதாவனோ
மருட்கணேற்குரை கூறுமஹேசனே (அ௬)

பாசமாமுப்பத் தாறும்பறிப்பனோ
தேசுனைக்கொண் டெனைத்தெரிகிற்பனோ
நேசவுன்பதத் தன்புட்னிற்பனோ
பேசுவாய்சற் பெருஞ்சிற்சபேசனே (அ௭)

பஞ்சகோசப் பகையையொழிப்பனே
மிஞ்சுசாக்கிய தாகமிளிர்வனே
விஞ்சுநின்னில் விரவிக்களிப்பனே
செஞ்செவேயுனா சிற்சபைச்செல்வனே (அஅ)

பாம்புக்குப்பசுப் பாலளித்தாங்குட
லோம்பிநின்றிங் குழன்றலேந்துற்றியான்
சாம்பினேனோர் சகாயமுங்கண்டிலேன்
பூம்பதத்தைக் கொடுப்பைபுராணனே. (அகூ)

அறிவுமூடறி யாமையுமாக்குறுஞ்
செறியுமாயையஞ் ஞானமுந்தேய்ந்திட
நறியதாம்பத்தி ஞானமுநல்கிமெய்ப்
பிறிவின்முத்தி யருள்பொற்பினுகனே. (கூ0)

நச்சுநாம முருவநழுகவுஞ்
சச்சிதானந்த மாகச்சருவமு
மிச்சடற்கினித் தோற்றவுநீயிரங்
கெச்சடச்சித்து மாத்திகழீசனே. (கூக)

சாக்கிராதி யவத்தைகடாண்டியா
னேக்கிடாதுனை நோக்குற்றணையமா
வாக்கியம்புகல் வாய்வளரன்பர்தம்
பாக்கியப்பொரு ளாகும்பரமனே. (கூஉ)

வள்ளலைப்பர மேசனைவன்கழு
முள்ளனைச்சங் கரன்றனைமூதருள்
வெள்ளனைக்கரு தாதவீணரை
யுள்ளக்கம்பிக்குங் கம்பிக்குமுள்ளமே. (௬௩)

அனைத்துமாகு மமலனைச்சம்புவைப்
புனற்சடாடவி யானைப்புராணனை
மனத்துள்வைத்துன லின்றியவம்பரை
நினைக்கவஞ்சுவ வஞ்சுவநெஞ்சமே. (௬௪)

ஆணவாதிப் பகைஞனையம்பல
வாணனைப்பணிப் பூணனைவாரிநஞ்
சூணனைக்கண் டுவப்பிலத்துட்டரைக்
காணக்கூசுவ கூசுவகண்களே. (௬௫)

பூரணன்றனைப் புண்ணியநீற்றனைக்
காரணன்றனை மாமணிகண்டனை
யாரனைப்பணி யாதவசடரைச்
சேரக்குற்சிக்குங் குற்சிக்குந்தேகமே. (௬௬)

நினைப்புட்டோன்று நிகிலப்பவஞ்சமர்
நினைப்புஞானத் துதித்துநிகழ்வதால்
நினைப்புஞானத் தொடுங்கிடநீயருள்
நினைப்புக்கப்புற நிற்குநிமலனே. (௬௭)

அரித்துப்பொன்னெடுக் கும்மரிப்பாளன்போல்
விரித்தவாறத் துவாக்களைவீழ்த்தியே
பரித்தெடுத்தெனைக் குஞ்சிதபாதத்துட்
டரித்திருக்கவைப் பாய்சிற்சபேசனே; (௯௮)

கல்லெறிந்துங் கரமெறியானென
வல்லற்பாச மகற்றியஞானம்யான்
புல்லநல்லருள் செய்குவைபுங்கமாந்
தில்லைமன்று ணடம்புரிசிலனே. (௯௯)

தனையன்கையினி லோர்பொருடந்துமுன்
பினையிரந்ததைப் பெற்றிடுந்தந்தைபோல்
வனையுடம்புமுற் றந்துபின்வாங்கநீ
புனையுமூவுருக் கொண்டனைபோதனே. (௧௦௦)

அன்புறுமாலை முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## மதுரை-சொக்கலிங்கம்.

---

பதினறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இருக்குமுதலெக்கலேயு முற்றவுணர் வுற்றறிவி ருக்குமமரர்க்குமிக்க, விடக்குசெய்தைத்தியர் வசித் துறவுழித்தரு மிளைத்திளையுவர்க்கடலது, முருக்கு மகிரிப்புற முறத்திரியருக்கனெ டுடுப்பதிசெலப்பதி விடா, தத்துங்கமத்தப்ர மத்தப்ரசித்தத்வ முறுவிங் த்ய பருவிந்தமும், பெருக்குமலயத்துளவகத்தியரட க்கடல் பெறக்கிர்பைகொடுக்கும்ப்ரபு,பீஷணமில்வி த்ஞதா போஷணவவீக்ஞதா பேஷணதயாபூஷண, மருக்குவிசுபத்மச ரணப்ரசாதம்பிரியர் வாழப்ரசா திப்பவா, மறைநற்கலிங்கமிவர் நிறைகைப்புலிங்க வெரி வளர்சொக்கலிங்கசிவமே. (க)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## ச ச் சி த ா ன ந் த ம்.

ஷை விருத்தம்.

நிற்பந்தவிக்ரக நிராமயநிரஞ்சன நிராகிர்தம்பரி பூரண, நிரதிசயநிஷ்களம் பரமார்த்தமுக்தமய நிஷ்

கம்பநீதமதுலஞ், சிற்பரமசங்கநிர்க் குணநிராலம்ப
ஞ்சிதாகாசநிர்வ்வசன, நிதம்விபுபோதமமிதம்பர
மசாந்தந் திருக்குநிமலஞ்சத்திய, முற்பவவிமோசன
வ் கைவல்யரஞ்சித முதாசினங்கிர்பாவிலாச. முக்ரு
ஷ்டமட்சர மகோசரநிதானஞ்ச யுசிதம்ப்ரமேயரகி
தங், தற்பதஞ்சர்வசாதிஷ்டானமென்றுவே தாகமா
திகள்புகன்ற, தத்துவானந்தபர நித்தியானந்தகர ச
ச்சிதானந்த சிவமே. (க)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## ப ஞ் ச ர த் தி ந ம்.

### ஷை விருத்தம்.

அருண்மிகவளிக்குஞ் சனகாதியர்க்குமறிவரு
மௌனமுந்தெரிக்கு, மாருரர்வியக்கும் பரவையை
மணக்கு மங்கமோடெதிர்வரநயக்குஞ், சருவமுமதி
க்குங் கங்கைமேற்பரக்குஞ் சாம்பவியழகினிற்குளிக்
குந், தருமனைக்கறுக்குங் கிடிப்பறழ்க்குணக்குஞ் சா
ர்தரும்பசியகற்றுவிக்கு, மருவுமன்பிறுக்குங் கண்
ணப்பர்விழிக்கும் வானவர்துயர்க்குநீர் துளிக்கு, ம
லர்க்கணைதூக்கு மதன்றனைபெரிக்கும் வருங்குமர

னைக்கண்டுகளிக்குந், திருவிழிக்கிருக்கும் பெருமை யையுரைக்குந் திறமுண்டோ சேடனுதியர்க்குந், திங் களுமெடுக்குங் கங்கையுமடுக்குஞ் செஞ்சடைமுடிக் குஞ் சங்கரனே. (க)

இருமறைகளுக்கு மருங்கலையெவைக்கு மியற் பொருண் முநிவருக்கிசைக்கு, மேதிலர்வசிக்கும் புர ம்படநகைக்கு மிதமுடன்றாதுரை தொடுக்கு, நிரு மலையிணக்குங் கங்கையுட்குணக்கு நீங்குறவினிய சொற்கிளக்கு. நீல்விடங்குடிக்குங் கண்ணப்பர்ப டைக்குநெடும்பன்றியூனினைக்கறிக்குந், தருமியென் பவர்க்குஞ் சுந்தரர்தமக்குந் தமிழ்க்கவியதன்முதல் கொடுக்குந், தவறுறுமதிக்கு மார்க்கண்டமுனிக்குந் தண்கலைவயதீ ரெட்டளிக்குந், திருநல்வாய்க்கிருக்கு ம் பெருமையையுரைக்குந் திறமுண்டோசேடனுதிய ர்க்குந், திங்களுமெடுக்குங் கங்கையுமடுக்குஞ்செஞ் சடைமுடிக்குஞ் சங்கரனே. (உ)

உருக்கதிரெறிக்கு மணிக்குலஞ்சிறக்கு முரகரகு ண்டலங்களைத் தரிக்கு, மூப்பினைவிளைக்குங்கிளியெ னப்பணிக்கு முமைசொன்மாதுரநெறி நடக்கும், ப ருப்பதநிகர்க்கு மசுரனையழிக்கும் பாலன்போதனை

ணயயுட் செறிக்கும், பாணனரிசைக்குஞ் சாமவோ
த்தொலிக்கும் பரிவுடனிடமது கொடுக்குந், தருக்க
ரைச்செயிக்கு நால்வர்களிசைக்குஞ் சத்துதிகளைச்சி
ர வணிக்குந், தக்கன்சொல்வெறுக்கு முறைமையுட்
படுக்குந் தாழ்த்திடாதுளங் கனிவிக்குந், திருச்செவி
க்கிருக்கும் பெருமையையுரைக்குந் திறமுண்டோ
சேடனுதியர்க்குந், திங்களுமெடுக்குங் கங்கையுமடு
க்குஞ் செஞ்சடைமுடிக்குஞ் சங்கரனே. (௩)

எருவையையுரிக்குங் கிரிதனைவளைக்குமிரும்பை
ப்பொற்கங்கணந்தரிக்கு, மெரிமழுப்பொறுக்கு மம
ருமதிக்கு மினமணிசெழியற்குப் புரக்கு, மருவும
ங்கையர்க்கும் வளைகளைத்தொடுக்கு மதுரையிற்செ
ய்யகோல் பிடிக்கு, மால்வரையசைக்கு மிராவணன்
றனக்கும் வாளொடுசிவலிங்கங் கொடுக்கு, மருளரித
னக்குந் திகிரியைப்பயக்கு மருங்கல்லானைக்குமிக் க
ரிக்கு,மயன்சிரங்குறைக்கு மீன்வலைவிடுக்கு மம்மை
யையன்புடனணைக்குந், திருவத்தத்திருக்கும் பெரு
மையையுரைக்குந் திறமுண்டோசேடனுதியர்க்குந்,
திங்களுமெடுக்குங் கங்கையுமடுக்குஞ்செஞ்சடைமு
டிக்குஞ் சங்கரனே. (௪)

ஒருமறைவசிக்குந் தவருளந்தரிக்கு மூந்திபூத்த வன்விழிசுமக்கு, முயர்ந்தபொன்றளிர்க்கு மம்பலந டிக்கு முமைவிழிக்கானந்தம்விளைக்கு,மருவனங்களு க்கும் பரவைதன்மனைக்குமரும்பிள்ளைக்கறிக்குந்தா னடைக்கு, மாதனைந்தொடுக்கு முயலகனெடுக்கு மரக் கன்றன்சிரங்களைநெரிக்குந், தருமனையுதைக்குந் தெ ருவினைமிதிக்குஞ் சண்டிகைத்தருக்கினைச்சிதைக்கு ஞ், சயிந்தவமுடுக்கு முயிர்மலங்கெடுக்குஞ் சாந் தகேவலத்துறவிடுக்குந், திருவடிக்கிருக்கும் பெரு மையையுரைக்குந் திறமுண்டோசேடனுதியர்க்குந், திங்களுமெடுக்குங் கங்கையுமடுக்குஞ் செஞ்சடைமு டிக்குஞ் சங்கரனே. (ரு)

பஞ்சரத்தினம் முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## வண்ணப்பதிகம்.

ஆசிரியச்சந்தவிருத்தம்.

மூலம்வளரின்பசங்க ஞானமயசம்புலிங்கமோ னமெய்சிரம்பரங்கம்-பரிபூத,மோசனசலந்திறங்க மே கமதுலம்பரங்கு மோகரநிரந்தரங்கொள்-சிவசோதி,

மாலகலநின்பதங்க ளாருயிரடைந்திலங்க மாகவவு டம்பிணங்கி-யுளவாக, மாகபுவனங்களங்க மாதியரு ளுங்கணங்கள் வாழ்கபிலையங்கிணங்கு-சகாாதா,வா லமைதொழும்பினங்கள்வேதமொடுதெந்திரங்கண்மா ஹரமெனுங்களன்க-ணிறைவாக, வாணன்முழவங்க றங்க வீணைசமுகந்தழங்க வாரணமடர்ந்திலங்க-மகி ழ்வாகித், தாலநிகர்குந்தளங்கொண் மாமலைமடந் தைகண்கள் சார்சுகமருந்தமண்டு-மருண்மேவித்,தா திமிததிங்கணந்தை தாதிமிததிங்கணந்தை தாவென நடங்கனிந்த பெருமானே. (க)

புத்தமுதாருலகத்தவர்க்குமு கத்தவர்கீழுலகத் தவர்க்குமை பொத்தியமூவர்பலத்திநுக்குமெ- யழி யாது,பொத்தறுமாவரமுற்றதைத்தியர் புற்கலமாளு றமொய்த்தழித்திடு பொற்பமையாறுமுகத்தவர்க் கொரு-சுபிதாவே, வித்தகவாதபுரித்தவர்க்குள சித் தமதார்மலமுற்றுமக்கணம் விட்டிட்ஞானமுனைத்து மற்றவர்-முடிமீது, மெய்ப்புறுபாதமமைத்தயிக்கிய மூற்றிடமாகிர்பைவைத்தவற்புதமெய்க்கருணைகரசுத் தவக்கம-துடையோனே, முத்தமதோடுதெரித்தவர்க் குள டுத்தெழுபாவமகற்றுநற்பொடி, முச்சியுமேனு

மணிக்கணத்திர-ளணிவோனே,முப்புரிநூலவர்முச்
சகத்திர மத்தினிலோருருவுற்றவுத்தம முத்தமிராம
யபுத்தநித்திய-மறையோனே, சத்தலர்தேவரிறைத்தி
டப்பெரு மத்தளமாயணடித்திடச்சல சத்தவர்தாள
மொடித்திடக்கணிர்-கணிராகச்,சத்தமெய்வேதம்விய
த்திடக்குற டத்திமிதோமெனமுற்றிடத்திகு ணைத்
திமிதாமெனநட்டமிக்குறு-பெருமானே. (உ)

மணிசேர்ந்தவரிந்தமனாடிடமகிதாங்குமனந்தவ
னாடிட மறையோர்ந்தமரந்தணனாடிட-மகிழ்வாகி, வ
டிவாழ்ந்துகணிந்திரனாடிட வமுதாய்ந்துணுமந்தரரா
டிட வதிகாந்திகொள்சந்திரனாடிட-விருளோட, வெ
ணிலார்ந்திடுசெங்கதிராடிட முனிவோய்ந்திடிலிங்கி
களாடிட விகநீர்ந்திடுதொண்டர்களாடிட-வினையோ
ட, வியசோங்குமருந்தவராடிட வருள்வேங்கைபத
ஞ்சலியாடிட விவண்மாந்தர்களெங்கணுமாடிட - வு
ணர்வாகி, விணிலார்ந்திடுகெந்தர்வராடிட மயிலூர்ந்தி
டுங்குகனாடிட விறல்சேர்ந்திடுமைங்கரனாடிட-நிகழ்
வாகி, மினலோங்கிடுசெஞ்சடையாடிட மருவாய்க்
திடுதொங்கல்களாடிட மிளிர்வேய்ந்திடுகுண்டலமா
டிட - விருபாலு,மணிசேர்ந்தகைவிண்டதளாடிடவ

ரவாம்பணிகங்கணமாடிட வடறேங்கரிணங்குளிரா டிட- வுடனாக, வளைதோன்றிடுவென்றுடியாடிட ம றையான்றெழிறுன்றரியாடிட வடியூன்றியிமன்றினி லாடிடு-பெருமானே. (ங.)

திதியடைந்திடு மறிவுடன்கலை யுளாதடங்கொ டு மிகவணங்கிடு திடமுறைந்துள வவையையங்கையி னதனாலே, சிமயவெண்கிரி யமைவுறும்படி புரியு மைங்கர னருளெனும்படி செழிமதஞ்செறி கரிமுக ன்றனை - யருள்வோனே, விதிசெயந்தணன் வெளிநு ழைந்துடல் கரியசெங்கண னுகமகழ்ந்தெழில் விர வுசெஞ்சிரமடிதொடர்ந்துமெ-யறியாது,வெருவுறும் படி பகபகென்றெழு மருணவங்கியெ னுருவமன்று று விமலசங்கர சிவசிதம்பர - கனவானே, மதிநிறை ந்துள சனகர்முந்துறு மடியரன்றெளி துணரவின் பொருண் மருவுதென்றிசை முகமடைந்தரு - டரு வோனே, வலியவண்டளை யுமதிவென்றிகொ ளலரி னைங்கணை மதனெரிந்திட மனமுனிந்தனல் விழிதி றந்திடு - முதலோனே, அதிகாஞ்சித கயிலையங்கிரி யதனிலந்தரி தனையணைந்துறு மகிலவண்டமு மிலகு றும்படி - புரிவோனே, யாவதுந்துமி கணகணென்

றிட வணிசிலம்பது கலகலென்றிட வரியமன்றினி
னடமுயன்றிடு - பெருமானே. (ச)

அரவமருவு சுருதிமிருதி முதலவளவில் கலைக
ளெவையு மறையுமுடிவி னரியவுரைக- ளவையானு
மகிலமருவு மொலிகொள்பரிச முருவமிரத மண
மென்விடய மவையில்விளரி பொருதுமிதய-மதனு
னும்,பரமசொருப முணர்தலருமை யருமைய ருமை
யெனவறிவுசெய் பரமவுரைகள் புகலுமிலகு - குரு
நாதா, பாவுமணமு நறவுமுடைய கனகமுளரி மலர்
கணிகர்செய் பதமதினித மனசைநிறுவில் - கொடி
யேனை, விரவுகருவி னுழையுநெறிக ளறமெய்விமல
வுணர்வினடையில் விராவில்விவர மதுடனடைய
விதுபோது, விரைசெயலர்மொய் குழல்கொளுமை
யொடடியர்குழுவு மருவமழவு விடையிலருளி னடி
மைகொளமுன் - வருவாயே, தாணியவரு மமரெ
வரு முரகர்கணமு மரியவெணம சலமதுறவ லெளி
தினணைய - மகிழ்வோடுஞ், தகுகுதகண திமிதெய்
செகண செகுகுதகண வெனவிரணிய சபையினட
ன மிகவருளிய - பெருமானே. (ரு)

தெருட்டுமென்குறு மிர்தமெனவுடனுறை பிரட்டிணங்கிடுமிர்கருணமுளவொரு திருட்டசந்திகழ்திர்டமதிலடியனை - வசமாடித், திறக்குரம்பைவிகிர்தமெனவறிபவர் பொறுக்குமின்பவமிர்தமனமுடையவர் திருக்கணந்தனைமிர்தியினுமுறைவறும் - வகைமாடி, மருட்டுமங்கையர்மிர்கதரவடமுதலிருக்குமன்புளமிர்கமதபரிபள மருக்குநம்பைகணிர்மதமுறவுநிமிர்முலைமேலு, மதர்க்குமைந்தர்கள்சர்வமயலுறவலைகருக்குமஞ்சனமிர்துவினில்வளைகொடு மயக்குவன்குணமிர்தமதையிகழ்செயும் - விழிமேலு, மிருட்டுமங்கசன்மிர்கமரவளைபுக விரட்டுமெங்குல்கொள்கர்வமதுபடமிக விருட்டியந்தசுகிர்தமலர்தகமொய் - குழன்மேலு, மிடைக்குவந்திடுமிர்தமெனுமுளைதனைநிகர்த்தலம்பியகிர்தசொபமடையுய ரிதச்சிலம்பணிதிர்தமுறுமளைமல - ரடிமேலும், வெருட்டுகங்குலுநிர்மலவெலதுமற முடுக்கதின்றிறமிர்தியுறவுணர்வினை விளக்குமின்பசுகிர்தநிருவடிதர- வருவாயே, விடக்கதொன்றிடுமிர்துமுயலகன்வெரிம் வெடிக்கவின்றவிர்கிரிதரிகடவென மிளிர்க்குமன்றமர்கிர்பையுடனடமிடு - பெருமானே. (௬)

சிங்கத்திசையிற் சிங்கத்தணையிற் சிங்கப்பதி யொத் - திடுகோலன், சிங்கற்செயுமைச் சிங்கிக்கழுமு ட் சிங்கற்றொடர்பற் - றிடவேதக், கங்கைத்தலறக் கங்கைப்படவெற் கங்கைக்கனியிற் - செறிநாளுங், கங்கைத்துனுமக் கங்கைப்பெறுமெய்க் கங்கைச்சக ளத் - தியொடேவா, தங்கச்சிலையைத் தங்கைத்தல னிற் றங்கக்கொடுநற் - றடமான, தங்கப்புறமுற் ற ங்கப்புரமொய்த் தங்கிக்கிளையிட் - டிடுவோனே, சங்க க்கடலைச் சங்கக்கடையச் சங்கக்கனகைத் தலர்தாழ் துற், சங்கத்தகல்சிற் சங்கத்துயிரிற் சங்கச்சபையுட் பெருமானே. (எ)

தருப்பங்குன் றிரத்தந்தங் குருப்பந்துன் கரு ப்பந்தங் தரிப்புண்டங் குரித்தங்கங் - கிளர்வாகித், தழைக்குஞ்செந்தழற்குந்திண் டளைக்கும்பின் புரை க்குந்தொந் தளைக்குந்தங்கிளைத்தும்பின் - புறமாகிக், குருக்கந்தம் பரக்கும்பைஞ் சுதைக்கொண்டுங் கு ணக்கென்றுங் குடக்கென்றுஞ் சொலிக்கொண்டும் - விளையாடிக், குணிக்கும்பைந் தலைக்குஞ்செங் கழற் கும்பின் பெலைக்கும்பொன் குவித்தங்கம் படித்து ஞ்சந் - தனமாடிக், கருத்துன்றுங் கடற்கொன்றுஞ்

செவிக்குஞ்சென் றலைக்குங்கண் கவித்தென்றுஞ்
செருக்குஞ்செந் - திருமானூர், கவிற்கண்டும் பினைச்
சென்றும் பணிக்கென்றும் பொருட்கென்றுங் கரு
த்தங்கந் துடித்தெங்குந்-தினமோடுந், திருக்குங்கொ
ன் றடிக்கஞ்சம் புகத்தஞ்சஞ் சிறப்புந்துன் றிருக்க
ண்கொண் டெனைக்கண்டின் - பொருளோது, திருத்
தொண்டன் பருக்குந்துன் பறுக்குந்தண் புலிக்குன்
கஞ் சுகிக்குங்கண் கொடுக்குஞ்செம் - பெருமானே.

கோகனகனுக்குங் காணறநிவக்குங் கோடிரமு
டிக்கு - முடியோனே, கோமதனெரிக்கு மோனமறி
விக்குங் கோதிருளழிக்கும் - விழியோனே, யாகமம
றைக்கும் வேதமுனிவர்க்கு மார்பொருளுரைக்குஞ்
சிறுவோனே, யாறுமுகர்சொற்கு நால்வர்கடுதிக்கு
மாவலோடெதிர்க்குஞ் - செவியோனே, மேகநிறனு
க்கு மாவளைகொடுக்கும் வேலனைபெடுக்குங் - கர
வோனே, வேழவுரிமொய்க்கும் பூதியைவரிக்கு மே
ன்மணிநிறைக்கு - முருவோனே, பாகம்வருவிக்கு
ஞானமதளிக்கும் பாடென்முடிநிற்குங்-கழலோனே,
டாய்பணியனுக்கு நாடறவிருக்கும் பாதமதெடுக்கு
ம் - பெருமானே. (சு)

பொத்தன்மெத்த முற்றியுற்ற சுத்தவித்த மற்ற வப்பின் புற்புதத்தை யொப்புனாக்கு - முருவான, புக்தவித்த முட்கொளிப் பிணத்திலெத் தினத்தும் வைத்த புத்தியைத் தவிர்த்துமுக்த - வறிவோஙி, வித்தைசுத்தசுத்தமற்ற தத்துவத்தினுற்பவத்தின் வித்துவைத் தெரித்ததற்கு- மிசையான, மித்தையற்ற சுத்தசித் தெனைத்துலக்கியெப்புறத்து மிக்களித்தசிற்பனாக்கு- வினிதாக, வைத்திளைப் பகற்றியப் புறத்திருக்கு முத்தபுத் தவத்துமெய்ச்சுகத்தமுக்தி- யடியேனு, மைப்பொறுத்துமிக்கமத்த சித்தனுற்றமத்தகத்தின் மட்புசித்தசக்கிரிக்க - ஞுணராத, சித்திரச்சுவைப்பதத்தை வைச்சுறற்புலத்தொடற் புதித்தொத்தெனக்கைபற்று - மருளோனே, தித்தித்தித்த தித்தி தித்தித்தெனத்தனித்த சிற்சபைக்கணிர்த் தனித்த - பெருமானே. (௧0)

வண்ணப்பதிகம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

ஷ சம்புலிங்கம்.

சந்தமிகுமம்புயங்கட் குறழ்வாகித் தங்குமுனை செம்பதங்கட் குறலான, கந்தமலர்கொண்டு சிந்தித்

தெழலான கங்குல்பகலும்பரிந்தத்தமதாலே, மந்தி ரமுடன்சொரிந்திட் டணேவேனே மங்களகரங்கொ ளும்பொற் பொதுவோனே,சுந்தரமிலங்குமங்கட்பு கழோனே துங்கசிவசம்புலிங்கப் பெருமானே.(க)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## ௯ அருணசலம்.

நினைவுறமுத்திசெ யருணையினற்புத நிதியருள் சக்கரனே, வினையறுமுத்தர்க ளகமதுபற்றிய விம லவைவயக்கரனே, புனையடியர்க்கடு முமலமறுத்திடு பொடியணிபுற்கலனே, மூனைமொயுருத்திர மணி கொளிரத்தின முடியரவக்கலனே. (க)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## பஞ்சகம்.

சந்தப்பாவினம்.

அமர்பொதுமேவிபோகஞானநாடக மருளிய தேவதேவபாவநாசக, குமரனையேவிமானமேறுசூரா ன்வன் குலமொடுமாளவானமாள்செய்போகின, வி

ணையவர்மோதமோடுவாழவேயரு ளெழில்கோளும்
வேதமோதுவாயனேயரு, ளுமையொருபாக மாமு
லோகநாயக வுசிததுரோணமாலை சூடுமீசனே. (௧)

திகழ்திருமார்பனோடுபோதுவாழ்விதி திருவுறு
தேவர்வேத மாகமாதிகள், புகழ்சுசஞானரூப தேவ
நாயக புனிதமூறேறதேறுமீசனுனைவ, நிகழ்மதமாவி
ன்மேதை யேறுமேனிய நினைபவர்போதமேவஞான
நீதியை, யிகழ்வறவோதியாளும் யோகநாயக வென
துளம் வாழவாழுமேகநாதனே. (௨)

விகசிதமாசரோச நேர்கொடாளினில் விரவிய
வாசையானதே விடாதென, தகமுறநீயுளேயுனிச
னேனுய வகமறுஞானயோகர்சூழவேமிகு, சுகநட
மேபொருளுமாடுவோயளி தொடரலர்தாமமாலைசூடு
வோய்தொழ, விகபரபோகம்வீடுமீயுவோய்நல மி
சைகயிலாசவாசனேமகேசனே. (௩)

கயலெனமேவு காதுமீதுலாவிய கவின்விழிமா
தராசைவாரிவீழ்வுட, னயர்வதுசேர்வுறுதவாறுநீதி
யி லணுகலிலேழைநாளும்வாழவேயுறு, தயவருள்
வாய்கணுதிபாபணுடவி தழைவுறுநாகபூஷணு பரா

யரா, வுயர்வொடுசோமம்வேறிலேகனேசிவ முறு
பொருளானஞானமோதுதேவனே. (ச)

மனமிகுலோபமான மாதிமாய்வுறும் வகைபுரி
நேசமோடு கூடியேபூதிர், கனியெனநாஞநாவுபாட
வேயருள்களைதருபாவின்மாலைபாதமீதினி, லினிமை
யதாகநாடிநீகொள்வாயர வெழினதிராமமேவிவாழு
நீள்சடை,மினல்விடுசேகராகபாலவாகன மிளிர்பொ
துவாடுஞானவேதநாதனே. (ரு)

பஞ்சகம் - முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

ஷ கவிசங்கரம்.

மறைமுடிந்திடமுறைந்திடுபெருந்தலைவியை
மணவறம்புரிவுறுங்கருணையக்கடலினே
யுறைபெரும்புவனமும்பதிகளும்பணிசெய
வுயர்வெழுந்னபொனம்பலநடம்பயிலுவோய்
கறைமிகுக்களமுறும்பரமசங்கரவிரை
கலவிடுங்கமலவந்தணனுடன்கரியவ
னறைநெடுங்ககனமண்டுருவியுங்கதிர்விழி
யறிதரும்படிதவிர்ந்திடவளர்ந்தவரனே. (க)

விண்டலங்கடங்கிடங்க ளென்றுகொண்டுவி ண்டிலா, வண்டரும்பயங்கரங் கொளன்றுநஞ்சமு ண்டவா, வெண்டுலங்குசெம்புயங் கொடெண்கணி ன்றபண்டனே, தொண்டர்வந்துவந்தனஞ்செய்து ங்கமண்டு நம்பனே. (உ)

சந்தனகுங்குமங்கள்புழுககில் சந்ததமங்காங் கொடேலது, கந்தமிகுந்துதங்கவணிவொடு கந்தர மங்கமண்டுகருமைய, குந்தளவங்கொணங்கைகலவி யென் குண்டுபொருந்துமுந்தி முழுகினே, ஹய்ந்தி டமின்பதங்கடருகுதி யுந்தியதுந்திமின்றதலையனே.

நிலைமைச்சால்பதுமேவியு ணிறையத்தானரு ண்மாதவங், குலையப்பாவியுளேயுறை கொடுமைக் கோபமதாமழ, றுலையச்சிதளமேறிய துணைமெய் ப்பாதகுகோதகன், தலைவைத்தேயருள்வாயமர் சம யத்தாணுவதீதனே. (ச)

கலையைவிரித்தேயறியுமுளத்தார் கருதுமலர்த் தாளெனதுமனத்தே, நிலைகொளவைத்தேயருளுநிச ற்றேநிகழும்வனச்சுகாகுருளைக்கேய், முலையமுதிட் டேவளர்வுறவைத்தோய் முதிருகனித்தேனெனவு ருசித்தே, மலைவிலகத்தாரறிவிலிருப்போய் மலம தொசித்தேயிலகிடுசித்தே. (ரு)

உ

திருச்சிற்றம்பலம்.

ஷ பலசந்தமாலை.

கனகசபை யினினிகரி னடனமன வரதமுறு
கருணையொடு புரியுநல வழகா,வனகதவ முனிவரக
மதனிலொரு சுகசனித வருணவம தருளுமிகு குழ
கா,பனகசய னயனனி யளவில்பக ருருவியறி ப
டலிலடி முடியிலகு பொருளே, மனமதனி லளவி
ன்மகிழ் வணையடிய ரொடுமுறவு மருவும்வண மரு
ள்செய்திரு வருளே. (௧)

எனதுமலமதிரியும்வகைசெயினியசரணமருள்
வையோ,மனமென்வனிலுறையுமகமென்வரியுமு
டியவருவையோ, தனமதுடையமகளிர்மயல்கடவிர
வருள்செய்திடுவையோ, புனலுமதியுமுடையசடை
கொள்புனிதமருவுபகவனே. (௨)

ககனம்வளியனல்புவனிலமதிகனலிபுலனிவை
வடிவோனே, சகலவுலகமுமயல்செய்வலியுறுதனும
தனையெரிவிழியோனே, பகலொடிரவறுவெளியிலுல
விடுபரமகுருவெனுமருளோனே, துகளறுவடகயி
லைமலையுறைசுகுணநிருமலபகவானே. (௩)

கலைமதிமதிலணைவுறுபொதுவதிலுமை கண்காண, வலைநதியலைதரநடமிடுபசுவினதைந்தாடி, தலைமையதுறுமிருகழலடிநிகழ்கரிதந்தோனே, நிலையிறவமதுதிகழ்வுறுமனமிடமின்றேனே. (௪)

பொறிகடுன்றியவுருவு புலனிலொன்றியகரணஞ், செறிவதின்றியசுகுணசிவசின்மன்றுளபரம, வறிவதொன்றியவிமலரவருணின்றிடுமெடிகள், பிறிவதின்றியவுணர்வுபெறலதென்றுணாபுகலே. (௫)

தண்டங்கழுகொண்டங்குறு சண்டன்பெறுபிண்டம்,பிண்டங்கிடவெண்டங்கடிகொண்டன்றுதைகண்டு, விண்டங்குவர்மண்டங்குவர்கண்டன்றவம்விண்டே,தொண்டிங்குறமன்றந்திகழ்துன்றுந்தயைவிண்டே. (௬)

மேவிக்கொள்சீர்தொக்கதாளைக்கொடேழைக்குவேதக்குழாஞ், சேவிக்கவேநிற்குமாநக்கனேசக்குசேர்நற்குளா, நாவிற்கணுமக்குழாம்வைக்கநீர்வைக்குஞானக்கணு,வாவிக்கணிசிற்கநேசிக்கவாழ்விக்குமார்சொக்கனே. (௭)

பூபாரப்பதிவாழ்வேசெப்பஞர்போதார்கற்பகவூர்ச், சோபாரத்தனமார்வேயைக்கடிதோளாளக்கழூ

தென், றேபார்வைப்படநீபார்வைத்தயையேயேழை க்கருள்வாய், காபாலக்கரனேகாலற்கொருகாலாமுக் கணனே. (அ)

வடிவெடுத்தெழுதரியமபனேமலைவளைத்திடுவ லியபுயனே, துடிபிடித்திடுநெடியகானே சுடர்மணி ப்பனகமணியுரனே, பொடிதரித்திலகுருவவரனே புகழ்மறைப்பொருளுரைசெய்பரனே, கொடிதெனச் சொலுமலவயிரியேகுலவெனக்குளுறுமொருகரியே.

கமலமுறைவித்தனுற்றதாளங்கொடு கமலகரம் வைத்துமொத்தமாயன்கர, மமலைசெயமத்தளத்தினு ளும்படியணையுமுயிர்சித்திமுத்திசேரும்படி, மூமல மறுவித்தசுத்தபாதந்தனை மூயலன்முதுகத்தில்வை த்துமோதந்தரு, விமலககனத்தினித்தமாடுங்கணவி புதர்புகழ்நித்தமுத்தவானந்தனே. (௧0)

பலசந்தமாலை முற்றுப்பெற்றது.

உ

திருச்சிற்றம்பலம்.

## நவரத்தினமாலை.

பாவினம்.

வாசபங்கயமலர்வளர்திருமறு மார்பனம்புயவ லரவனடிமலர், தேசமர்ந்திடுமுடிபலபகல்களுந் தே

டியும்பெறலரிதெனுமுணர்வொடு, நேசமண்டிடுதுதி பலபுரிவுற நீபகிழ்ந்தருள்புரிதருநிருமல, கோசமைந்தையுநழுவியுனடியுறக் கோலமின்றிமெருள்புரிபரமனே. (க)

கலையேறியவறிவாளர்செய் கவிமாலைகொள்சரணங், கலையேறியமதியோடுரகமதேறியசிகரங், கலையேறியகரமேவியகருணாகரநிதியே, கலையேறியவிடையார்மயல்கலவாவணமருளே. (உ)

கொடிதானவினையையடியார்களுய்பக்குலமோடுமொய்க்கும்பரமே, மடியாதமுத்தியருளோடுதந்தவடிமேவுஞானகுருவே, துடிமேவுசெங்கையுறசம்புவேயென்றுணேயேயிலங்குசிவமே, படிமேவுமாசையாவைக்கும்வித்தாம்படிறேற்குமுத்தியருளே. (ங)

ஞானமணிமன்றுனட மாடியநடேசா, பானல்விழியாளேயொருபாகமுறுநேசா, வூனவிழியாலமருமுன்னைமிகநோக்கி, யீனன்மகிழ்வுற்றிடவிருங்கருணைசெய்யே. (ச)

அருளினாலகிலம்படைத்தளித்தழித்தத் தொழிற்கப்பாலாய்ப், பொருவில்சிற்சொருபானந்தமாகியபூரணப்பூந்தேவே, யிருளில்வந்துறுமறிவின்மையா

ற்பரிவிங்ஙனுனடைந்தெய்த்தே, னெருவராயினுந்த க்கதோர்துணையிலேயுய்ந்திடவருள்வாயே. (ரு)

எந்தக்குலமாயெவராயிடினுமிசையும்பூநீர்கொண்டுள்ளன்பாய், முந்தும்பூசைமுடித்தாராயின்மூவாப்பதமேதவருதருள்வோய், தொந்தொம்மெனவேநடனம்புரிவோய்தோன்ருத்துணையா மருளேத்தறவே, சந்தப்பருவங்கோடியேற்கிலேயோ சான்ருேர் தருமாறன்றென்பாரோ. (சு)

மாயையானசுடு கோடைமாய்க்கவுறு வலமைமேவுசிவமேகமே, காயமாதிகளேயானெனும்படிசெய்கார்கொளாணவநாசனே, வேயைவென்றுவளர்தோள்களாருமைநல்விழிகளித்திடநடிப்பவா, பேயனேன்பிழைகள்யாவுநீக்கியுறுபெரியபேரருள்புரிந்திடே.

கண்மைசேர்குருந்தடி மூளேந்திடுமுக்கட்கரும்பே, தெண்மையன்பராம்வண்டுணக்காசிவாழ்தேனே, யண்மையாகிநீயிருக்கவுமறிகிலாதந்தோ, வெண்மையாகியிங்குழலுவனுனக்கழகீதோ. (அ)

இறையாமைந்தக்கரவோனே யெழிலாமைந்தக்கரவோனே, குறையாமுருகைப்பெற்ருேனே குணமாமுருகைப்பெற்ருேனே, மறையமலேக்குமரியானே

வடிவமலேக்குமரியானே,பொறைவில்லாகத்தரித்தோ
னே பொதுவில்லாகத்தரித்தோனே. (கூ)

நவரத்தினமாலே முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## திரிபந்தாதி.

கட்டளேக்கலித்துறை.

திருமால்விடையயன்காணுப் பதங்கமென்றிட்
டியுறக், கருமால்விடையுறுஞ்சற்குருவாகிக்கனைசெ
ய்சங்கைக், கொருமால்விடைதருமுத்தமஞான வுமா
பதியே, பெருமால்விடையிவர்பேராயிரத்துப் பெரு
மையனே. (க)

பெருமையிலங்குரித்துந்தியவாலிற் பெருந்த
வத்தோர், கருமையிலங்குறுகாதேமறைப் பொருள்
கட்டுரைத்தோ, யருமையிலங்குமரனுநிமேல்வைத்த
வற்பகற்றி, யொருமையிலங்குறுமுத்திதந்தாளவுகந்
தருளே. (உ)

அருளாரமுதமமுதுசெய்தோங்க நஞ்சாற்றெ
னவே, வெருளாரமுதர்நினேவேண்டநீயுன் விளங்கு
கண்டங், கருளாரமுதம்பெறவவரவ்விடக்கைதொ
ட்டவா, பொருளாரமுதர்புகழ்மால்புகழ்ந்திடும்பூம்
பதனே. (ந)

பூம்பதநாகங்கடுக்கையங்கூவிளம் பொற்சரண த், தோம்பதநாகழறக்கரந்தூவவுள்ளுன்னவுடல், சா ம்பதநாகமனமென்றுணரத் தருதியருள், போம்பத நாகமணிந்தேயிலங்கும்புராதனனே. (சு)

தனமுடையோடெனநோக்கப்பரந்த தனையுள காஞ்,சனமுடையோடென கைகொங்கையார்கங்கை சார்கழுதென், றுனமுடையோடெனதங்கமதாம்பந் தமோவவருள், கனமுடையோடெனக்கொம்போய டியனைக்காப்பவனே. (ரு)

காப்பவனீவிருகற்பதிவாழுலகாதிகணற், பூப் பவனீவிருளுற்றுமினென்றரிபூமற்கருண், மாப்பவ னீவிருந்திகொன்றைமாலையன்வானவர்க்கு, மூப்ப வனீவிரும்பித்தகிகேட்டருண் முத்தியதே. (சா)

தேவாரமுந்திருவாசகமுஞ்சொலுந் தெள்ளியர் க்கு, மாவாரமுந்திவரந்தஞானமணிவிளக்கே,கோ வாரமுந்தியகொங்கைபங்காளகுஞ்சரவென், னுவா ரமுந்திவந்தேயுனைப்பாடு நலம்புரியே. (எ)

நலம்பிரியாதவயிலிகல்வாள்விழி நங்கையர்தங் குலம்பிரியாதகனதனங்காணுங் கருத்தையொழி, சில

ம்பிரியாதமறைச்சிலம்பாபெருந் தென்புலியூர்த் தல
ம்பிரியாதவனேநடராஜமெய்ச் சங்கரனே. (அ)

கரந்தைவருணமலர்கொண்டுபோற்றிக் கனிந்த
வன்பர்க், கரந்தைவருணங்கெட நாட்டஞ்செய் சிவ
வார்பொறியாம், பரந்தைவருணடுங் கக்கலக்காவ
கைபார்த்தருளாய்ப், புரந்தைவருணஞ்செவியுட்புக
வின்றுபோதிப்பையே. (கூ)

போதித்தருவனருகனைத்தேவெனும் புன்சமய
ம், வாதித்தருவாளுமுனைத்தேவெனு மஞ்சமய,மா
தித்தருவர்க் கடலெழுந்தாங்கென வாக்கினர்க்குச்,
சாதித்தருண்முனநின்றிட்டவாதவர் தந்திருவே. ()

திரிபந்தாதி முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## மும்மணி.

நேரிசைவெண்பா.

கார்கொண்டமேனிக் கடவுளயன்முதலோர்
நார்கொண்டுபோற்றுநடராஜா—சீர்கொண்ட
நீர்மேவுநான்கறிவோர் நேசித்தசற்குரவு
நேர்மேவுமென்குருவு நீ. (க)

உருத்திருண்டமேகத்தை யொவ்வாயெனறஞ்ஞர்
கருத்திருண்டதென்னக்கருமை—பருத்திருண்ட
தேனூர்பூங்கோதைச் சிவகாமியாரொன்று
மானாடேச ஹரா. (உ)

காரணமாநின்ற கருத்தாநடேசனினைப் [ய்
பூரணமாவாழ்த்துவதேபுண்ணியநாத்— தாரணிமே
சேரத்தொழுவதுவே சென்னியாங்கண்ணருவி
நேரச்சிந்திப்பதே நெஞ்சு. (ந)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

தெட்சணாமூர்த்திவெண்பா.

கருணைத்திருவடிவாய்க் கல்லாலின்கீழே
யிருணைத்திருநால்வர்க்கேலப்—பொருண்ஞானம்
போதித்துவைத்த புனிதகுருவேஞான
வாதித்தனேயென்னை யாள். (க)

ஆள்வாரிலியூர்மா டாகித்திரிவேனைத்
தாள்சூட்டியாளத்தகாதுகொல்—வேளெரித்த
கண்ணுதலோய்மெய்ஞ்ஞானக் கல்லாலடியின்கீழ்
நண்ணுபவனே நவில். (உ)

நவிலும்பரசிவர் நண்ணரியமுத்திப்
புவியிலொன்றுமென் றபோதத்—துவிதமறச்
சின்முத்திரைபாற் றெருட்டும்பரகுருவே
நன்முத்தியென் றடைவே னன். (௩)

நானென்னும்போத நடுவேமுளைத்துநின்று
கோனென்னுநின்றன்குரைகழலாந்—தேனென்னுட்
புல்லாமற்செய்யுமதைப்போக்கியருள்வைத்துக்
கல்லாலமூற்றுமெனைக் கா. (௪)

காதல்வெகுளிக் கரிசறுத்தென்னுள்ளமெனும்
போதணையாக்கொண்டுபுனிதச்செம்—பாதங்கள்
வைத்திருப்பதென்றோ மணியேயான்போகங்கள்
கைத்திருப்பதென்றோ கழறு. (௫)

கழற்கணைனதுள்ளங் காத்திருக்கச்செந்நாப்
பழச்சுவைபோலுந்துதிகள்பாட—வழுத்துமணி
காயம்புரியக் கருணைபுரிவாயின்று
பாயும்புலித்தோற் பரா. (௬)

பரசிவபந்தப் பரிசுணர்த்தியாளச்
சரதசுயம்பிரகாசப்பே—ருருவெடுத்து
வந்தகுருவே வளர்மணியேமெய்ஞ்ஞான
சுந்தரனேபாமாலை சூடு. (௭)

சூட்டுசிரமீதிற் சோதிமலர்ப்பதங்கள்
வாட்டுமலங்களெல்லாமாறவே—பாட்டுக்
கருளேபுரிகுருவே யம்பரமேவேதப்
பொருளேயடியேற்கிப் போது. (அ)

போதன்றிருமால் புலவர்வணங்கப்பொற்
பாதஞ்சிவந்தபரமனே—வேதஞ்சொல்
வித்தகனேயுன்னை விடாதவடியேனைச்
சித்தமுறுமெய்யருளாச் செய். (கூ)

செய்யசடையுந் திருவதனமண்டலமுங்
கையமர்சின்முத்திரையுங்காழ்மலமும்—பொய்யு
மழித்தவடியு மாவந்துமுன்னே
கழித்திடுவாயென்றன் கரு. (க0)

மூலகுருவாகிய
தெட்சணாமூர்த்திவெண்பா
முற்றிற்று.
உ
திருச்சிற்றம்பலம்.

## ஷ திருவருள்வியப்பு.

திருப்பாற்கடலைச் சிறுகுழந்தைகூவ
விருப்பாலளித்திட்டவெல்விற்—பொருப்பு

ணருளேயருளன்றி யல்லாரருளு
மருளோவுளமே யறை. (க)

கல்லெறிந்தசாக்கியர்க்குங் காட்சிகொடுத்தசிவ
னல்லருள்போலும்பரினுநாடினு—லில்லை
பிரியாதிருந்தாற் பிழைக்கலாநெஞ்சே
கரியாகநீயிதனைக் காண். (உ)

சித்திக்கும்புத்திக்குஞ் சுத்திக்குந்தேவபத
முத்திக்குமத்துவிதமுத்திக்கும்—பத்திக்கு
மூலந்திருநடன முன்னேனருளேயென்
ஞேலமிடும்வேதநெஞ்சே யுன். (ந)

உரையாதிசேஷ்டை யொழித்துமனமே
திரையாவுநீக்கித்தெளித்துப்—பரையரனிற்
கூட்டுந்திருவருள்போற் கூறுநலஞ்சமயக்
காட்டிடத்துமுண்டோ கரை. (ச)

அப்புமுப்பும்போற்பிரியா வாறுதனைக்காட்டி [தாய்
யெப்புறத்துநின்றளிக்குமீசனருட் —கொப்புடைத்
வேறுபொருளுண்டென்று வேதாகமாதிகளுங்
கூறுமோநெஞ்சே குவி. (ரு)

வேண்டுவனவெல்லா மிக்கவளித்தளிக்குந்
தூண்டுதலில்லாச்சுடரின் றூவருளை—யாண்டுந்
திரிவிலாதேயுருகிச் சிந்தித்தானெஞ்சே
பிரிவிலதாமுத்திவரும் பின். (சு)

கண்டவர்தமுள்ளங் கவரும்பெருநடனங்
கொண்டசிவபெருமான்கோலவரு—ளெண்டிசைக்கு
மாதாவாம்வேறில்லை யாழ்ந்தமனமேநம்பு
போதரசம்பின்புவரும் பூத்து. (எ)

மூலமலத்தின் முழுகிக்கிடந்தவெமை
மேலடையத்தூக்குவிட்டான்விறருளைப்—போலவே
யுற்றதுணையுண்டோ வுள்ளமேநீமறந்த
பெற்றியென்னைவென்முன்னே பேசு. (அ)

பெத்தமுத்திதம்மிற் பிரியாமனின்றளிக்கு
மத்தனருளையன்றியாருண்டிங்—குற்றதுணை
யென்றுமுக்காற்புகன்று மேழைநெஞ்சேநாடாம
லின்றிருந்தாலியான்செய்வ தென். (கூ)

தஞ்சத்திருவருளைத் தான்விட்டுமுன்னோடி
விஞ்சுவினையாலேவெப்புண்ட—நெஞ்சே
யரனருளைமுன்னிட்டே யைம்புலனையுங்கண்
டுரமுடனேநீயுண்பா யுற்று. (க0)

திருவருள்வியப்புமுற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## திருவருட்பஞ்சகம்.

### எழுசீரடியாசிரிய விருத்தம்.

ஆணவமலமாமிரவினிற்கிடந்த வடியனேன்றன்னையன்றருளாற், பேணியேயெடுத்துத்தனுவில்விட்டதுவும்பின்னருமுயிர்த்துணையாகி, யேணமாயுள்ளின்மறைந்திருந்திசைந்த வின்பமென்பனநாளுநாளுங், காணவேயூட்டிநின்றதும்பரநின் கடைக்கணிற்றோன்றியவருளே. (௧)

அருளினாற்றனுவுங்கரணமும்புவன மானதுமமைந்தபோகங்கள், சருவமுங்கிடைத்தவென்றறியாமற்றாழ்த்திடுமவித்தையாற்கட்டுண், டிருமையுநாமேமுயற்சியாற்பெற்றோ மென்றனுதினமுமுண்மையதாக்,கருதியேகிடந்தவென்பிழைபொறுத்துக் கடைக்கணித்தருளுவாய்சிவனே. (௨)

சிவமெனும்பொருளேயுயிர்வருக்கங்கள் செகமுறுபலபலபொருளா, மெவையுநீயென்றுன்னருளதனாலே யிசைவுறக்காட்டினையின்று, பவமொழிந்தகலவவ்வழிநிறுத்திப் படிறனேன்றன்னையெந்நாளுந், தவமுறக்காக்குங்கடனுனதலவோ தமியனேனுனைப்பதென்னேயோ. (௩)

உரைசெயன்முதலாவுள்ளனவெல்லாமுன்னரு
ட்செயலலால்வேறே, கரையவுமுண்டோநினைக்கவு
முண்டோ கருணையங்கடற்றிருவடிவே, பரையருளி
ன்பவுருவனேநடனம் பண்ணிடுந்தகரவாகாச,வரை
யனேகாளத்திப்பரம்பொருளே யானைக்காவாழ்ந்தி
டும்பரனே. (௪)

பரமனேயிராமலிங்கமேமருதூர்ப் பண்ணவா
காழிவாழ்தேவே, திரமறைக்கெட்டாமோனமே யடி
யர்செய்திடுந்தீமையைப்பாரா,வரனெனுங்கருணாநிதி
முழுமுதலேயப்பனேவேதகிரீசா, குரவனாய்வந்தெ
ன்குறைதவிர்த்திட்ட கோலனேயென்னையாண்டரு
ளே. (௫)

திருவருட்பஞ்சகம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## ௯ திருவளர்பதிகம்.

திருவளர்கமலத்துறைவிதிநெடுமா றேடியுமறி
யகிலாத, வுருவளர்சோதி யரும்பெரும்பொருளே
யொப்பிலாக்கருணையங்கடலே, மருவளர்மலரார்வா
ன்புரைகுழலாண்மகிழவராப்புலிதுதிக்கக், குருவள
ர்மணிமன்றினிடம்பயிலுங் கூத்தனேயென்னை
யாண்டருளே. (க)

அருள்செயுமுருக்கொண் டாலின்கீழ்நால்வர்க்
கருமறைப்பொருடனை மகிழ்ந்து, மருளறவுரைக்கு
ஞ்சிவபெருமானே வஞ்சனைகத்தசேதனவல், வி
ருளறஞானச்சுடருறத்தந்தா ளெந்தையேபவப்பிணி
மருந்தே, தெருளருந்தெளிவே குணப்பெருங்குன்
றேசெல்வமேயழிவிலாத்தேவே. (உ)

தேவர்கண்முனிவர் புகழ்ந்திடுவளங்கொ டில்லை
யுள்ளாய்பொறியைந்திற், றுவல்செய்துலகப்பற்று
டையிதயந் தனைபொரீஇநாளுநன்னறவார், பூவலா
ருச்சித்தடிபணிந்தரியபுனிதனைவல்யமுற்றுயுமா, று
வலேற்கினியவருள்புரிபரனிற் கன்றிமற்றுண்டுகொ
ன்னவிலே. (ங)

நவிற்றிடற்கரியவண்டகோடிகளு ளுவிதசீவர்க
ண்மிருதி, பவித்திரமறைகண்முதலியவனைத்தும் ப
டைத்தனைபரிவிலேனெஞ்சம், குவித்தருந்தவந்தான்
புரிந்துமெய்ந்நிலையைக் கூடிடவருள்வகுத்திலைகொ
ல், துவித்தெறவொன்றாய்விளங்குசெஞ்சுடரே து
ணையெனக்காருணைசெய்யே. (ச)

செய்யவார்ச்சடையிற்பிறைமுடித்தவனே தே
வனேசுடர்மழுவுறுசெங், கையனேகறைகொண்மிட
ற்றனேசிவனேகௌரிபங்குறைதிருநீற்றின், மெய்ய

னேமணிமன்றினினடம்புரியும் விமலனேவினவுவ கேண்மோ, தொய்யலைம்புலப்பற்றிரியநின் சரண்க டொழவருடருவதுன்பரமே. (ரு)

பரமனேகுழந்தைவெம்பசிக்கிரங்கிப் பனிப்ப யவாரிதியளித்த, திரவருட்கடலேகுணப்பெருங் கு ன்றேதீவினைக்கோரருமருந்தே, புராமூறுமூவாயிரம றையவரினோர்மறையவனெனவந்த, வரதனேயென் மூனுமையொடானேறி மகிழ்ந்துவந்தாள்வதெந் நா ளோ. (சா)

நாளுநாண்மலர்கொண்டுனதடியிணையினல்லரு ச்சனைபுரிகில்லேன், வாளுடைமணிப்பொன்மாடநீடி ல்லைமன்றிலுன்னடனங்காண்கில்லே, னிளநாவி னுற்றமிழ்பாடி நேடிடநயக்குகில்லேன்மற், கோளு டையகத்தோடிவணுறைந்துழன்ற கொடியனுய்வ கையதினெண்ணே. (எ)

எண்ணியவனிதைமாடமாலயமா யினைந்தவர் கடவுளென்றேவல், பண்ணிவன்காமவிகாரியாய்த்தி ரிந்துபனிதரும்பிறவிவாரிதியி, னண்ணினேன்றன் னையஞ்சலென்றேற்ற நாளினும்வாவிலைகொல்லோ, வுண்ணினைகிலையோ வசட்டையோகல்லோ வுள்ள மோதருமறைமுடிவே. (அ)

மறைமுடிவிலங்குஞானவிண்ணொளியோ வஞ்சனையியையந்தவெம்பொறியாங், துறையதிற்சென்று விடயவானந்தந் துன்பமென்றெனுதினிதென்றே, குறைவறப்புசித்துப்பின்றுயரடைந்த கொள்கையைச்சிந்தையினெருகா, லிறைத்துணைநினைக்கப்பதைக்குதேயந்தோ வென்செய்வேனீதறியாயோ. (கூ)

ஈதறியாமலிருப்பையேயானு லியான்பவவெடுப்பதேவேலை, யாதலாலெளியன்குறித்திழைபாவமாதிபதொழிலொருசாலும், வீதலாகாதேயாகலின்வினையன் வெம்பிழையெலாம்பொறுத்திரங்கி,மேதகுதவங்கள்வழுவறப்புரிந்து வீடுறநினைதிருவருளே. ()

திருவளர்பதிகம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

சச்சிதானந்தவாழ்வு.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மனையுறுதீபம்விட்டு மற்றழறேடுவார்போல்,வினையினேனகத்துணிதான் வேறிலாதிருந்துங்காணு, துனையிடம்பலவுந்தேடி யுற்றிளைத்தேற்குஞானந், தனையின்றேயருளல்வேண்டுஞ்சச்சிதானந்தவாழ்வே

நெய்யினையின்றியாக நிறைவேற்றநினைப்பான் போலப்,பொய்யினையுன்னன்றிப் பொருவிலா முத்திதன்னை, யெய்தப்பன்னூல்களாய்த லேனெறி யென்றலைந்தேன், சைவசித்தாந்தமோங்குஞ் சச்சி தானந்தவாழ்வே. (உ)

கண்ணொளியிருளையுண்டு கதிரொழுந்தெனவிப் பாச, மண்ணொழுவாய்நாதாங்க மருவியகருவியோடு ண், ணண்ணெனைவிழுங்கிநீயே நகுதல்செய்திடுதல் வேண்டுந், தண்ணெனுமருளாய்நின்ற சச்சிதானந்த வாழ்வே. (ந)

சருவநீயென்றுரைக்கத் தனிமறையான்வேறா கி, வருவினையுண்டோவிங்கு வந்தவாறெனக்குரைத் து, மருவியகருணானந்த வாரியையின்றுனக்குத், த ருவம்வாவென்றழைப்பாய் சச்சிதானந்தவாழ்வே.

பொன்மயந்தவிரவேறுப் பூஷணமுண்டோவா ங்குச், சின்மயந்தவிரவேறு செகமுண்டோவென்று கூற, நன்மயவாக்கியத்தை நம்பியுன்னருளைப்பெற் றுத், தன்மயமாகச்செய்தி சச்சிதானந்தவாழ்வே.

பிறங்கியமூன்றெழுத்தும் பிரணவத்தன்றிவே றே, புறம்பெனநின்றமூன்று பொருளுமச்சிவத்தி ன்கூறென், றறஞ்செயுன்னருள்வாக்கல்யா னறிந்

தனுபவிக்கச்செய்து, மறம்பவமகற்றியாள்வாய் சச்சிதானந்தவாழ்வே. (சூ)

கைவிளக்காலேயொன்றைக் காணலினருளைக்கொண்டே, யுய்வகையுணையுணர்ந்தே யுச்சியினுவலமென்னப், பொய்வனைநீக்கிமெய்யிற்பொருந்துறக்கருணைசெய்வாய், சைவமாமறையில்வாழுஞ் சச்சிதானந்தவாழ்வே. (எ)

கொள்ளித்தேள்கொட்டப்பட்ட குரக்கெனக்குதிக்குமென்ற,னுள்ளத்தைக்கருப்பூரந்தொட்டுண்ணுறுதீபம்போல, விள்ளவுண்டப்புமுப்பும்விரவலினெனைக்கலப்பாய், தள்ளில்பேருளைப்பூண்ட சச்சிதானந்தவாழ்வே. (அ)

ஆதவன்சன்னிதானத் தடுத்துறுதீபம்போற்றற், போதமதடங்கிநிற்கப்பொருவருந்தயைபுரிந்து, பேதமோடபேதம்பேதா பேதமுஞ்சூழன்றுநின்ற,சாதமுத்தியையளிப்பாய் சச்சிதானந்தவாழ்வே. (கூ)

துளங்குறுகறங்கதென்னச் சுழல்வுறுமனமாய்த்தேழை, விளக்குமுன்னேடிணங்கி விமலமாநிற்கவேண்டி, யிளங்கன்றதற்குச்சேதா விரங்கல்போலின்றுநீயே, தளர்ந்திடுமெற்கிரங்காய் சச்சிதானந்தவாழ்வே. (கo)

சச்சிதானந்தவாழ்வு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# ஞானநிஷ்டாபேட்சை.

## கலிநிலைத்துறை.

கருவியாவையுநின்னருள்கொண்டியான்கழற்றிப்
பொருவில்சச்சிதானந்தமாம்பரமயம்பொருந்தி
யிருமையாகியபோதமுமகன்றிடவெனக்கு
மருவுநல்லருள்புரிகுதிமன்றுள்வாழ்மணியே. (க)

அறிவினோடறியாமையுநீக்கிமெய்யறிவாய்ப்
பிறிவிலாவருடரிசித்துப்பெட்புடன்பெரிய
குறியிலாச்சிவபரம்பொருளாமுனிற்கூடி
மறிதராதுறவருள்புரிமன்றுள்வாழ்மணியே. (உ)

சகலகேவலநீத்துணர்வாய்நின்றுசார்ந்த
விகலமில்பரைதன்னுளென்னறிவினைவிட்டுச்
சுகசொருபமாமுன்னுடன்பிறிவறத்துலங்க
வகரமாமருள்புரிகுதிமன்றுள்வாழ்மணியே. (ங)

இ[illegible]சப்பொய்மையமாயையாமென்றுளேயெண்ணி
நச்சி[illegible]ாமனின்றாருடனையேநம்பி
நிச்சலும்பிருந்துன்னிலேகலந்துறநீகண்
வைச்சுநாயடியேனையாண்மன்றுள்வாழ்மணியே. (ச)

காணவந்தனஞ்செய்யவிவேகமில்கடையேற்
காணவந்தனைமாயையாமல்பகலகற்றி
யேணமைந்தமெய்ஞ்ஞானமாமொளியினிலிசைந்து
மாணடைந்துறவருள்புரிமன்றுள்வாழ்மணியே. (ரு)

நினைவுடன்மறப்பாகியபோலைநிகழாக்
கனையினல்லறிவாகியமாக்கடல்கலந்தே
யினைவுநீங்கியக்கழூந்துறவருள்புரியின்று [யே.
வனையுஞானவிண்ணென்றனைமன்றுள்வாழ் மணி

சாக்கிராதிபவவத்தைகளியாவையுந்தணந்து
போக்கில்சிவனைப்பரனையஞ்சிவத்தினைப்புரிந்து
நோக்கிமேற்சென்றுதுரியத்துணின்றிடநுணுக்கம்
வாக்கினுலுனாசெய்குவாய்மன்றுள்வாழ்மணியே. ()

கரணவாதனைமாற்றியத்திரையில்பாற்கடல்போற்
புரணமாமுணர்வாய்நின்றுமேலவாய்ப்புகுந்துங்
கரணவானந்தநிஷ்டையைமேவியங்கடைந்த
மரண நீங்கிநின்றிடவருண்மன்றுள்வாழ்மணியே ()

இரவுநற்பகல்சேர்ந்துறுவிடத்தினிலிருத்திப்
பரவுமானந்தவடிவினைத்தந்தெனைப்பரிவாயப்
புரவுசெய்திருவடியினுற்றூக்கியேபோக்கு
வரவுமின்னிலைவைத்தருண்மன்றுள்வாழ்மணியே. ()

எனதியானெனுமகமமதைகடமையீர்த்தே
யினலினல்லறிவாயென்றுநின்றமொன்றிரண்டென்
றுனலிலாநிலையென்னேவைத்திடுங்கடனுனதே [யே
மனமுமெட்டொணுப்பேரொளிமன்றுள் வாழ்மணி
பிரித்திடப்படும்பிழைபலபுரியினும்பிள்ளை
யுரித்ததாமனைபொறுத்தலினியருளூட்டி
யரிட்டமில்பதத்துரியத்திற்செலுத்தியதப்பால்
வரிட்டரன்னிலைவைத்தருண்மன்றுள்வாழ் மணியே.

ஞானநிஷ்டாபேட்சை முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## காப்பியக்கலித்துறை.

நாமார்நமகருப்பதியாரொனுஞானமின்றித்
தீமாதர்களின்பங்கருதியதீயனுய்த
லாமாறுபுரிந்திலேயேலினியாவதெங்ஙன்
மாமாயன்வணங்கும்விளங்கியமன்றுளானே. (க)

பையாரரவப்பணிபூண்டுறுபண்பனேயோ
கையார்மழுவேவாய்சிவபூதகணேசனேயோ
வெய்யாய்தணியாய்திருநீற்றின்வெண்மெய்யனேயோ
செய்யாய்கருணைப்பெருக்குய்யவித்தினனேனே. (உ)

வில்வம் மறுகும்புனே வோயுன் விறற்கழற்கே
புல்வம்மினியேயிங்குவாவெனப்போந்தழைத் தேன்
செல்வம்விடயங்களிலென்றெனையீர்த்தசித்தங்
கொல்வம்மெனநீவந்தெதிர்நின்றுகூறலென்றே. ()

என்றாழ்முனமீனமொடுங்கியதென்னயானு
நின்றாவருடன்னுளடங்குறுநிஷ்டைசெய்து
அன்றாசலினுர்பிறப்பற்றுச்சுகம்பொருந்த
நன்றாகமுஞானமுமேயருணம்பநீயே. (ச)

ஆனுதெனதாருயிருண்ணீயணுந்துநின்று
மீனுயமலச்செயலாலுனையின்றுகண்டேன்
றுனுவொளிரும்மருளாங்கதிர்தாம்பரப்பு
கோனுஞ்சிவசங்கரனேசற்றுணப்பொற்குன்றே. ()

காப்பியக்கலித்துறை முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

சங்கீர்த்தனபஞ்சகம்.

எழுசீரடி விருத்தம்.

மங்களாகரசங்கராவரமாதரார்கரபூதரா
இங்களாரஜடாதராசுயதெய்வமோனபராபரா
சங்கராகருணுகாசிவகாமசுந்தரியாதரா
புங்கஞானநடேஸ்வராசிவபுங்கஞானநடேஸ்வரா(க)

ஆலகாலசுபட்சணசசமாதியாவுமிரட்சண
மூலசர்வதுரந்தராபிரமோதமோனபரம்பரா
பாலசுப்ரமண்யாதராவிடுபந்தஞானபயோதரா
காலருத்ரநடேஸ்வராசிவகாலருத்ரநடேஸ்வரா. (௨)
மூலமானசுதந்தராதிரிமூர்த்திருபநிரந்தரா
ஞாலகாரியகாரணசுகஞானசற்குருபூரண
சீலவேதநல்வாகனபாசின்மயம்பெறுமாகன
பாலநேத்ரநடேஸ்வராசிவபாலநேத்ரநடேஸ்வரா. ()
ஏதநாசநிராமயாவளரேகநாதவகண்டிநா
போதசத்வசுகாலயாபரிபூதபூத்தகிர்பாலயா
பாதநூபுரவாரணமிகுபாவமூலநிவாரண
வேதசாரநடேஸ்வராசிவவேதசாரநடேஸ்வரா. (௪)
பேதவாதமதாதீதாபரபீடலிங்கமனேகரா
சீதமாநதிசேகராவறிசித்தவாசமகேஸ்வரா
மூதராவரகங்கணவமுக்தமாசுணபூஷண
பூதநாதநடேஸ்வராசிவபூதநாதநடேஸ்வரா. (௫)

சங்கீர்த்தனபஞ்சகம் முற்றிற்று.

௨

திருச்சிற்றம்பலம்.

## ஷ ச து ஷ் டி ய ம்.

அடியனேனங்கத்தாலொருதாமுன்னரும்பணி
புரிந்தனைதயென்றும், படியுறப்பயின்றதாத்திருவுள

த்திற்பாங்குறவமைத்திட்டாலுய்வேன், வடிவுடையு மையாள்பங்குறவருளும்வள்ளலே யென்னுளத்துள் ளே, குடியுறுஞ்சச்சிதானந்தப்பொதுவிற்கோலயா ர்நடம்புரிசிவனே. (க)

ஏழையேன்வாக்காலுன்றிருநாம மிங்கொருக ரமுரைத்ததனைக், கோழையிலன்பாயென்றநந்தானு ரைத்த கொள்கையதாவெணிற்றூன்முப், பாழையுங் கடந்த சிதம்பரத்துய்வேன்பராபரசங்கரபொல்லா, ஆழையேவிலக்கும் பொற்பொதுநடிக்கு முண்மை யானந்தசிற்சிவனே. (உ)

மனத்தினாலடியேனொருதரநினைத்த வகைதனை யோய்விலாதென்று, நினைத்ததாவன்பினுன்றிருவுள த்தினீணினைத் திடுவையேலுய்வே, னனைத்தையுமாளு மகிலநாயகனே யாரணமுத்தியாம்பொருளே, கனத் தபொற்பொதுவிநடமிடுங்கருணு கரநிதியேசெழுஞ் சிவனே. (ங)

அறிவினாலடியேனொருதரமுன்னையறிந்ததைபெங் தக்காலமுமே, பிறிவிலாதறிந்ததாத்திருவுளத்திற்பெ ட்புறவமைத்தியேலுய்வே, னெறிதருபிரணவப்பொ ருளதுதானீயெனயாவருமுணரக், குறியதாக்கொன் றைத்தெரியலையணிந்து கோதிலாநடம்புரிசிவனே. ()

சதுஷ்டயம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## அழுங்கல்.

### கொச்சகக்கலிப்பா.

அளவைகளாலெவ்வளவு மாருமளவாவணமா,
யளவிலுலகுமளந்திருக்கை நின்னியல்பெவ், வள
விலிருக்கவைத்தாயவ்வளவே நிற்றலென்ற,னளவா
குமாதலினுலாண்டருள்செய்நற்பொருளே. (க)

கன்னங்கரிபகுழல் கண்டரிவைபின்செலவோ,
பென்னம்பெரியமுலை பெட்பொடுகண்டேறவோ,சின்
னஞ்சிறியவிடை தேர்ந்துமயங்கிடவோ, தன்னந்த
னிபேனைத்தான்படைத்தாய் நற்பொருளே. (உ)

மெய்ப்பொருளைநாடாமல் வேறுபலதுன்பமு
றும், பொய்ப்பொருளைத்தான்பற்றிப் புக்கழுந்திப்
போற்றிடவோ, விப்புவியைப்பற்றியெனதென் றுது
ன்புறவோ, துப்பிலனைத்தான்படைத்தாய் சுத்தசிவ
நற்பொருளே. (ங)

சகஞ்சீவனீசனெனுஞ்சத்தார்த்தநீயே யென்,
றகஞ்செறியநாயே னறிந்துந்தியக்கிடவோ, சுகங்கா
ட்டுமத்துவிதந் துய்க்காதலைந்திடவோ, விகம்பரம்
பாராதவெனைப்படைத்தாய்செம்பொருளே: (ச)

ஆனவருஞ்சிரவ ணாதியினுற்பதமு, மூனம
றவேயேழைக் குற்றிடுவதெந்நாளோ, ஞானமிகுமெ

றியை நான்சேர்வதெப்பொழுதோ, மோனநிலைபெற்று முற்றலென்றோசெம்பொருளே. (௫)

எல்லாமாநீநானென் றேய்ந்துபின்சுட்டோவலென்றோ, எல்லாமுநின்செயலா யெண்ணிநிற்பதெந்நாளோ, எல்லாவுயிர்க்குமிரக்கமுறலெப்போதோ, எல்லாத்துறவுமிசைவதென்றோ செம்பொருளே. ()

எல்லாப்பொருளுமுன்னி லேய்ந்தநிலைமையையும், எல்லாப்பொருளிலுநீ யேய்ந்ததுவுங்காண்பேனோ, நல்லார்கொளத்துவித நாடுதன்மாயாகமென, நல்லார்சொல்வதுதன்னை நண்ணுவனோசெம்பொருளே. (எ)

அழுங்கல் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## ௯ வேண்டுதல்.

மணிமேவுபுனற்கலையார் மாநிலத்தின்மகிழ்ச்சிதரு, மணிமாதிசித்திகளையடையமுயல் விருப்பனைத்தும், தணிவாகிமுத்திநிலை தான்பெறுமாவிருப்பருள்வாய், அணிநிலாவணிசடைக டலைக்குடப்பெருமானே. (க)

அழிகின்றவிடம்வேண்டி யலைந்தலைந்துநாளெல்லாங், கழிகின்றவகைவிட்டுக் கருதரியபொன்னருளைப், பொழிகின்றபூம்பதமே புகலிடமென்றுறவருள்வாய், மொழிகின்றகதிர்த்தாம முடித்தடப்பெருமானே. (உ)

அலைவளைந்தநிலமீதி லனந்தவிதப்பொருடேடி, யுலைகின்றமதிவிட்டே யொருவாதசிவஞான, நிலையருத்தம்யான்றேட நீயருள்செய்ட்ாகுருவே, கலைமகடன்னுபகனுங் காண்பரியபெருமானே. (ங)

அத்தன்முதலானவுற வனைத்தும்விட்டுநாடோறும், புத்தியகலாவருளே பொருந்துறவென்றகங்கனிந்து, முத்துத்திவலைமயிர்க்கா றூறுமுதிர்வுறவே,சித்தமதிறைடிநிற்கத்திருவருள்செய்பெருமானே

எங்குமுளபலவான வின்பங்கள்கருதாது, தங்குடத்தானந்தந்தாறுடியுளங்கசிவாய்ப், பொங்கியிருவிழியருவி பொழிந்திடவேவிம்மிவிம்மி, யங்கமறந்திடவருள்செ யானந்தப்பெருமானே. (ரு)

புகழ்பலவும்பெறக்கருதும் புந்திதனைவிட்டகற்றித், திகழுமுன்றன்புகழ்களின்மேற் செவிகள்செலவன்புடனேன், னகமுருகிநாளுநிற்கவருள்புரிதியருட்கடலே, பகவன்முதலாம்பெயர்கொள் பரானந்தப்பெருமானே. (சு)

அருந்தல்பெறவிரும்பிமிக வலையுமுளம்விட்ட கற்றிப், பொருந்துதிருவருளின்பம் பொசித்திடநீய ருள்புரிவாய், திருந்துசடைமொழுப்புநகுசிரமுமுறு ஞ்சென்னியனே, வருந்துமிடைமேற்களப மலைமக ள்சேர்பெருமானே. (எ)

புக்குமிகப்பலவாகும் பொருந்தல்பெறநாடாம ற், கக்குமொளித்திருப்பதத்திற் கலந்திருக்கவருள்பு ரிவாய், பக்குவத்துக்கீடாகப் பலவிதமாமுத்திநெறி, மிக்குநிகமாகமத்தில் விளம்புநடப்பெருமானே. ()

துர்க்குணமாங்காமாதி தொடராமற்சுகம்பெ ருக்குஞ், சற்குணமாமகமடக்கஞ் சாந்தமவாவுளமொ டுக்க, மிக்கபத்திதுறவடைதன் மெய்யுணர்தல்சிரத் தாதி, பெற்கருள்வாவிடைப்பரியே் றின்பநடப்பெரு மானே. (கூ)

இலங்குதிரையெனுமூன்று மெழிற்பதத்தான் மலமழுத்தித், துலங்குதிருவருளென்னுந் தூக்கிய தாள்கொண்டெடுத்துக், கலங்குமெனைச்சாயுச்யகதி யினிடையுறவைப்பா, யலங்குமரிக்கரியளித்தவான ந்தப்பெருமானே. (க0)

வேண்டுதல் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## புலம்பல்.

### எண்சீரடியாசிரிய விருத்தம்.

காமமாகியகடலினில்வீழ்ந்து கடையனுகியிங் குழன்றிடலறிந்து, நீயகிழ்ந்துமுன்வரலபுரியாம னிற்ற ருனழகாகுமோவுனக்கு, மாமன்மார்பனும்பூசிக் குமடியாய் வாசமாமலர்ப்பிரமனுமறியாத், தேமன் கொன்றையம்முடிவளர்பாமா தேசுபேவியசிற்சபை ச்சிவமே. (௧)

உலேயும்வாழ்க்கையைமெய்யென்றுநம்பி யுற்று நாயினுங்கடையனுய்த்திரிந்து, நிலேமையாகியதுணே சற்றுமின்றி நின்றுவாடுதறன்னேயேயறிந்தும், தலே வணங்கியநீவராதிருக்கை, தக்கதோநினேப்போருளத் தேனே, தொலேவிலாக்குள்ளக்குளிர்ந்திடும்பொய் கை சூழ்ந்தென்புலியூருடைச்சிவனே. (௨)

குத்திரத்தவன்வன்கொலேயாளன் கொடுமையோ னறுங்கைமருந்தினுக்குப், புத்தியோடுசுண்ணும்பிடு வெனினும் பொருந்திடான்மிகுகோள னிராகன், மூத்திசேரடியாரொடுங்கூடான், மூடனென்றெனேவிட் டிடநினேயேல், இத்திதித்தியென்றுடியபாமா தெய்வ மம்பலநின்றிடுமொளியே. (௩)

நம்புவோருக்கும் வஞ்சகஞ்செய்வோ னல்ல சால்பொன் றுநாடிடிலில்லோன், வம்புசெய்பவன் வெகுளியனிமெய் வார்த்தைசொல்லெனின்மருந்து க்குஞ்சொல்லான், வெம்புசீவருக்கிரக்கமதில்லான் மிக்கவிடம்பனுலோபனிடும்பன், பம்புளத்தனென் றேவிடலினைபேல் பாவிப்பாருளத் தெழுமருட்கட லே. (ச)

குளிர்மை தங்கிபகங்கைவாழ்சடையாய் கோ லமார்புனிற்றம்புலித்தலையா, யொளிவிளங்கியபளி ங்குநன்மலையே யோமெனும்பதப்பொருளதாஞ்சிவ னே, யளிகள்சூழ்ந்திடுகொன்றையந்தார்சேர்ந் தனி செயம்புயனேமலேவில்லோ,யெளியனுளமஞ் சக்கரப் பொருளை யிசைந்திநிம்படியருள்புரிபரனே. (ரு)

புலம்பல் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## முறையீடு.

### கட்டளைக்கலித்துறை.

சீர்கொண்டநின்றிருப்பாதாம்புயத்திற் செறிந் திருக்க, கார்கொண்டவென்னைமனப்பேய்பிடித்து

நடுக்கமுற, நீர்கொண்ட பார்மிசையாட்டுதென் மாற்றி நிகழருள்செய், தார்கொண்ட செஞ்சடைத்தேவேயிரத்ன சபாபதியே. (க)

ஆட்டாமலாடியபம்பரம்போற்றனதாமுருவங், காட்டாமலுள்ளும்புறத்துஞ்சுழலுங் கலிமனத்தை, வீட்டாமல்விட்டிடநடுநிலைமேவிய வீடதெனுந், தாட்டாமரைப்பகந்தந்தாளிரத்ன சபாபதியே. (உ)

வானேமுதலுலகெல்லாமுஞ்சற்பித்து வாழ்ந்ததனு, ஞானேயரசெனத்தானேசரித்து நடித்துமிகத், தேனேயெனுமருடீர்மனவானரந்திரவருள், தானேதனக்கொப்பெனவாழிரத்ன சபாபதியே. (ந)

அங்கையினெலெறியம்மனைபோல வகத்தினுள்ளே, பொங்கிக்குதித்துக்குதித்தெழுந்தோடிடுபுன்மனந்தான், றங்கியிருக்கவருள்செய்துபேயனைத் தான் கலப்பாய், சங்கரசம்புசிவமேயிரத்ன சபாபதியே. ()

அதிகவிசைகொள்விறிசெனப்பள்முக மாச்சிதறிச், சிதறியெழுந்திடும்பாழாமனந்தனைத் தீர்த்தனது, திதியுமைகுஞ்சிதரஞ்சிதபாதத்திற் சேர்த்தருள்வாய், சதுர்பெறஞானமணியேயிரத்ன சபாபதியே

புலிபோற்புலத்தின்மனம்பாய்ந்து பாய்ந்துசெம்போதகல, மிலியாகியானிற்கச்செய்தவினைலதையின்பவடிப், பலியாக்கியென்னையருளாகவாடலுன் பாரமன்றே, சலிலாலங்காரச்சடையோயிரத்ன சபாபதியே. (கூ)

ஐவாய்களாலும்விடமூட்டிக்கொல்லு மரவமென, மெய்வாய்கண்மூக்குச்செவியாலுந்துன்ப மிகக்கொளுத்திக், கைவாய்தவத்தைக்கெடுத்துத்திரியுங்கலிமனங்கொல், தைவாய்பிறையிற்சமமாமிரத்ன சபாபதியே. (எ)

சேர்ந்தாரைக்கொல்லியெனவடியேனைத் தினந்தினமுங், காந்தாளமோடுவருத்தித்தவமுங்கனகுணமுங்,தேய்ந்தோடச்செய்யு மனக்கொட்டந்தீர்ந்திடச்செய்வையரு, டாந்தாமெனநடித்திட்டோயிரத்ன சபாபதியே. (அ)

முத்தர்கள்போற்றுந்திருநடங்காண முயற்சியுடன், சுத்தநெறிச்செலவாவென்றடியன் சொலக்குதித்துப், பெத்தநெறியிலிழுத்திடும்பாழ்மனம் பேர்த்திடுவாய், தத்ததையென்றுநடிப்போயிரத்ன சபாபதியே, (கூ)

புற்பேய்பனித்துளிபோலாமுடம் பென்றுபோதமதி, னிற்பேமெனச்சொல்பொழுதேமுடுக்கி நிலை

கலக்கித், தற்போதனைசெயும்பாழாமனத்தைத் தி டைத்தருள்வாய், தற்போதமற்றநிலேமேவிரத்ன ச பாபதியே. (௰)

முறையீடு முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

கர்ன் ணமிர்தம்.

ஆசிரிய விருத்தம்.

மாதர்கூந்தற்கருங்காட்டின் மயங்கிவிழியம்பே றுண்டு, கேதமாகியுழல்வேனைக்கிழக்கேதள்ளிவிட்டு விடேல், பூதநாதசங்கரனேபொன்னம்பலத்துணட மாடீ, வேதநாதபரம்பரனே விளங்கும்புலியூருடை யானே. (௧)

அலைக்குமருப்புநகையார்தம் மகன்றவல்குற்கு ழினூழ்கி, முலைக்குன்றேறிமலைக்கின்ற மூடன்றன் னைவிட்டுவிடே, றுலக்குஞானச்சுடரொளியேதூண் டாவிளக்கேதீங்கரும்பே, கலக்குமெங்குங்காருணி யக் கடவுள்புலியூருடையானே. (௨)

அன்னநடையார்நிதம்பமெனு மரவந்தீண்டச் சிற்றின்ப, மென்னுநஞ்சந்தலைக்கேறி யிருப்பேன்ற ன்னைவிட்டுவிடேல், பொன்னம்பலத்தில்வாழாசேபூ

ங்கற்பகமேயற்புதமே, தன்னொப்பில்லானெனுமூத
லே சந்தப்புலியூருடையானே. (௩)

சங்கவளையார்தனமலையைத் தனமாமலையென்
றேகருதி, யிங்குத்துன்பமடைகின்றவேழையேனை
விட்டுவிடேல், பொங்குகங்கைமுடியணிந்தபுனிதா
ஞானேதபமூர்த்தி,செங்கைவீசிநின்றாடுஞ்செல்வாபு
லியூருடையானே. (௪)

மடவாருயர்ந்தமூலக்கிரிக்கும்வளருநிதம்பக்க
டற்குமிடை, யிடைவன்கொடியாற்கட்டுண்டிங்கின்
னலுற்றேன்விட்டுவிடேல், விடமேறிடுகண்டத்தாந
ல்வேதாவேதப்பொருளேயவ்,வடையார்புரமூன்றெ
ய்தவா வணியார்புலியூருடையானே. (௫)

ஏய்ந்தமாதர்மூலக்கரிக்குமிடையாமரிக்கு மிடை
நெறியிற், போந்துரோமச்சங்கிலியாற்புண்டேன்ற
ன்னைவிட்டுவிடேல், பாய்ந்தபுலியினதடரித்தபரனே
பரமரகசியனே, தோய்ந்துவானமுயர்சோலைசூழும்பு
லியூருடையானே. (௬)

மின்னார்கொங்கைப்பந்தாலே மெத்தமொத்துண்
டிளைப்பேறி, யின்னுநிதம்பப்பாழ்ங்கிணற்றிலெடுப்
பாரற்றுக்கிடப்பேனை, யுன்னாருட்கண் கண்டிலை
யோ வுனாக்குமுறைதான்கேட்டிலையோ, பொன்னா
ர்மேனிவிடங்கனே புகழார்புலியூருடையானே. ()

பொற்பார்கொங்கைமாதருடைப் போகம்வேண்டித்திரிந்துழன்றே, யெய்ப்பாய்நாயேனிங்கிருக்குமிருப்பைநீதானறியாயோ,வெப்பாலவர்க்குமப்பாலாயிலங்குஞானச்சுடரொளியே, பைப்பாம்பணிந்தபரஞ்சுடரே பாங்கார்புலியூருடையானே. (அ)

அடுக்குமன்னமன்னமிலா வையருந்தந்நடைதளர, நடக்குமடவார்கிலையதனைநாடென்மனத்தைவிழுத்திடுவாய், படிக்குமாலோடயன்வணங்கும் பாண்டிநாட்டையாளரசே, யெடுக்குமண்ணுமலையானே யெழிலார்புலியூருடையானே. (கூ)

பாலிற்றெளிதேன்கலந்தற்றே பணிநன்மொழியார்தம்முடைய, வாலிதானவெயிறூறிவருநீரென்றுகருதடியேன், றாலிகரித்தசித்தத்தைத் தூரநீக்கியொழித்திடுவாய், கூலியாளாமண்சுமந்துகொண்டபுலியூருடையானே. (கய)

அழகுரோமக்கொடிகட்டி யல்குற்றேரின்மதத்தேறி, யெழிலார்புருவவில்வளைத்தேயெரியார்விழிவெங்கணைதொடுத்துச், செழியதடியாலோங்குமினர்சேனையோடென்னைக்களத்தி, னிழியுமதனையெரிப்பாய்நிற் கியசாம்புலியூருடையானே. (கக)

நாட்டமீனங்கண்டவளை நகிலக்குமிழியுந்தியுந்தி, நீட்டமடிப்புத்திரைமாதர் நேரும்வடிவக்கடலாழ்ந்து,வாட்டமுறயான்விதிவசமோவந்தபுலிதான்விழித்திருக்க,வாட்டையெடுத்தபெருங்கள்வாயலர்சேர்புலியூருடையானே. (௧௨)

அல்குலரவமிடைச்சிங்க மணிசேர்கொங்கைக்கரியோதிச், செல்குலாவுகளக்கழுகந் திரண்டதொடைச்செவ்வாழைகளும், புல்குமாதர்வடிவவனம்புகுந்துமயங்கவிதிவசமோ, மல்குவளங்களகலாத வண்ணப்புலியூருடையானே. (௧௩)

ஈரமகன்றநெஞ்சவிற கிணைந்தகேசப்புகையைவிட்டு, நேருமுகச்செங்கொழுந்துயரநீட்டியெரியுமாதருருக்,கோரவனலிற்புழுப்போலக் கொடியேன்வாடவிதிவசமோ, சேருமன்னவயல்சூழ்ந்து செழிக்கும்புலியூருடையானே. (௧௪)

கடிப்பூங்குழலார்தம்முடைய கண்டங்கண்டந்தருமென்று, மடிப்புமடிப்புத்தருமென்றும்வளர்காலுயிர்கொள்காலென்று, மிடிப்பாரவரையில்லாதவேழையுணரவருள்புரிவாய், பொடிப்பூசிமெற்றிருமேனிப் புங்காபுலியூருடையானே. (௧௫)

பிடிபோனடையார்காதளவும் பெயருங்கணை வெங்கணையென்று, மிடையூரிடையூறிடுமென்றுமெ ழில்வாய்க்கூற்றுகூற்றென்று, மடிகளடிகடருமென் றுமடியேனறியவருள்புரிவாய், கொடையோர்மேவு நல்வேதக்குன்றேய்புலியூருடையானே. (க௬)

பென்னம்பெருங்கொங்கையர்சமுகம்பேயார்ச முகமேயென்று, நன்னங்கணவர்கைநாட்டனகை யைநாட்டுமுலகர்திரு, முன்னென்றென்னுளுணரவ ருணரூவாவிடையின்மிகுமிடியாண் மன்னுதனங்க ணமிகவுடையாண் மணவாபுலியூருடையானே. ( )

நாடுங்காமமூலமத ஞசஞ்செய்தநீயிருக்கக், கூ டுங்காமக்கடல்கடக்கக்கொங்கைக்குடமீயுங்களென த், தேடுந்தொடியார்பின்சென்று திரிதலழகோவுன் னடியேன்,நீடும்வேதவனம்வாழு விமலாபுலியூருடை யானே. (க௮)

காயுங்காமக்கனறணிக்கக் கங்கைவைத்தவுனை விட்டுச், சேயவதரபானமியான்செய்யவருள்வீரொன ப்பெண்ணார்,வாயைநோக்கிமிக்கலைந்துவாடலழகோ வுன்னடியேன், பாயுங்கருணைப்பெருங்கடலே பண் பார்புலியூருடையானே. (க௯)

தேமன்னினது திருப்பாதச் சீதநிழலையணையா மற், காமவெயிற்குக்குறங்கென்னுங் கதலிநீழலருள் வீசொன், சேமப்பொருளீசொனமாதர் பின்னே திரிதல முகேயோ, மாமன்மார்பணிதம்பணிய வாழ்தென்பு லியூருடையானே. (உ0)

கர்ன்னமிர்தம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

விண்ணப்பம்.

பாவினம்.

வெள்ளமிடவிருகண்ணீர் மொகுமொகெனவங் க மிகக்குழையப்புளகமெழவிதிர்த்திடநெட்டுயிர்த்து க, கள்ளமொடுபொய்தவிர்ந்துசற்குணங்களுற்றுக் கன்மனந்தானனல்கண்ட வெண்ணெயெனவுருகிப், பள்ளமதிற்செலுநீர்போற்றிருவடியிற்சேரப் பரப்பி யிருகரங்குவித்துமுடியிற்பால்கண்டு, தெள்ளமுத மெனத்துதிகள்பலவாகச்சொல்லத் திருவருளைத்தந் தருள்வாய் சிற்சபைவாழ்சிவனே. (க)

சீர்வைத்தபட்டம்விரிந்து சித்திரங்கள்காணத் தெரிவித்துப்பின்குவிந்து திகழ்த்தியிடாதென்னப், பார்வைத்துப்பின்பொடுக்கல் பண்ணும்வெளிச்சத்

தே பழியென்னுங்கொடியறுக்கும்பரியசுடர்வாளே,
நாவைக்குமுபநிடதநடுச்சிரசில்வசித்து நடனமனுதி
னமுமிகவிலுமகாசிவமே, யாவைக்குமாந்தெருளே
யிலங்கிடுநல்லருளேயெனைப்பிரியாப்பரம்பொருளே
யெண்ணமுடித்தருளே. (௨)

கட்டுமொத்தீங்கனியேகதலிபலாக் கனியே கனி
களெலாம்பிழிந்தெடுத்துக்கலக்குமொருசாறே, பட்
டவதிற்றெளிதேனும்பாலுடனே கண்டும் பாளிதமு
ங்கூட்டிமிகப்பதத்தொடுசெய்திரட்டே, நட்டமிலா
ச்சிவமணந்தான்வீசுநறுமலரோநண்ணுமதிலொழுகு
மதிமதுரமெழுந்தேனே, யெட்டலரிதாந்தெருளேயி
லங்கிடுநல்லருளே யெனைப்பிரியாப்பரம்பொருளே
யெண்ணமுடித்தருளே. (௩)

அருண்மேவுநின்றனக் தப்புறம்பாகுமாற்றால
கங்கொள்வினைக்கடலழுந்திநினைமறந்துபுரிந்த, பெ
ரும்பிழைகள்பொறுத்துநதி யொடுக்குபெருங்கடல்
போற்பேயேனைநீவிழுங்குபெரியபெருமானே, யொ
ருகோடிபாவமொன்றாச் செய்யும்புண்ணியமொன்
றொருகோடியாகச்செய்கச்சிகொளேகம்பா, கருமே
கமேருதரித்தெனக்கரியினுரிவை கனகமயத்திருவுரு
விற்றரித்தமகாதேவே. (௪)

கொல்லாதநால்வர்க்கும்யோகியாகிக் குருஞானமருள்சிவனேவேகியாகிப், பொல்லாரைத்தண்டித்தோய்சிவர்கட்குப்போகியாயின்பமளித்தருளுந்தேவே, நல்லாளோடிடபத்திவர்ந்துவந்து நாயேற்குக்கருணைநல்கியறிதல்செய்த, வெல்லாநின்றிருப்பணியாககொண்டேகுற்ற மெல்லாநீபொறுத்தருளவேண்டுமென்றே. (௫)

எச்சமயத்துள்ளவருமிறைஞ்சாநின்ற வின்பமயத்திருவடியிலணைந்துவாழ, விச்சிறியேன்றனைவைத்துச்சிறுபோதத்தி லியங்காமற்காத்தலுன்றன்கடனேயாலம், வைச்சகண்டாசசிகண்டாவகண்டமானவாழ்வுற்றபரசிவமேஞானமூர்த்தி, சச்சிதானந்தமயப்பொதுவின்மேவித் தனிநடஞ்செய்நடராஜதேவதேவே. (௬)

துறந்துநின்றதவர்க்கறமுஞ்சொன்னதேவே சுதைநீர்போலுங்கலங்தேசுடர்ப்பாதத்தி, விறந்துநின்றும்பிறவாமலிருக்குஞான மிசைந்தளித்தாயதனையுணர்வின்மையாலே, மறந்துநின்றபிழைபொறுத்துமடவேன்வாழும் வண்ணமருளோடினிதாமகிழ்ந்துநீயே, சிறந்துநின்றசிவகாமித்தேவியோடுஞ் சேவமர்ந்திங்கெளியேன்முன்றிகழுவாயே. (௭)

சிலந்திகண்ணப்பர்சாக்கியர்முதலோர் தீமை யைக்குணமெனக்கொண்ட, நலந்தனைக்கண்டுதிருவ டியடைந்தேனற்றிருவாக்கொன்றுசொல்வாய், சலந் தலைக்கொண்டதேவனேயுமையா டங்கியபங்கனே வெவைக்கும், பலந்தருதிருச்சிற்றம்பலம்வாழும்ப ரமனே நடனசங்கரனே. (அ)

கதியருள்சண் டேசுநாதனார்முதலோர் கருதியவன் ணமேயளித்த, திதிதனைக்கண்டுதிருவடியடைந்தே ன்றேவி யொடென்முனேநிற்பாய், விதியொடுமாலும் புகழ்ந்திடுதாவித்தகாதென்புலியூராம், பதியமர்தி ருச்சிற்றம்பலம்வாழும் பரமனேநடனசங்கரனே.

செம்பதந்தன்னைச்சிக்கெனப்பிடிக்கத் திருவரு டக்தெனையாளாய், கம்பமார்தேவமகளிர்மங்கலநாண் காத்திடுங்கண்டனேயகண்டா, சம்புவேபொன்னம் பலவனேசெகணதிங்கணதிக்கணவென்ன, வம்பு யவிழியாளின்புறநடஞ்செ யரசனேபரமராசியனே.

என்றுமியானெனதென்கின்றவாசனையுமிங்கக க்கவலையுமின்றி, யுன்றனையனுபவத்துளபடியேயுன் னருளாலுணர்ந்தடங்கி, பொன்றதாயின்பமடைந்து மேனிலையிலுற்றிடவேழையேன்முன்வந், தின்றுநீக ரூனபுரிந்திடல்வேண்டுமிறைநடராஜசங்கரனே: ()

தவளத்திங்கண்முடிபுலவத்தாதாடுறுபூஞ்சோலைதிகழ், சுவணத்தில்லைமணிமன்றுட் சுகமாநடனமலர்க்கூந்தற், பவளத்ததரத்துமைகாணப்பயிலுங்கருணைக்கடலேநீ, கவலைக்காளாமெனைப்பொருவில்கருணையமுதீந்தாளாயே. (௧௨)

ஆராவியற்கையவாவெழுப்பி யதனால்பிறப்பில்வீழ்த்திட்டுப், பேராவியற்கைபெறலொட்டாவலகையேபெருக்கிச்சுடுகின்ற, காராரஞ்ஞானக்கினியைக்கழிக்கஞானவமுதீவாய், சீராருஞ்ஞானகானேதில்லைப்பொதுவினம்மானே. (௧௩)

ஊனுந்தோட்டிகொடுபுலமாமோனைந்தானையடக்குதல்செய், வானுரவனாக்கூடும்வணம்வண்மைஞானவமுதீவா, யெரியாரிடுகாடுபேணமுண்டேப்பமிட்டுப்பேயாடக், கரிகாடரங்காவாடுகின்றகருத்தாமுதுகுன்றுடையானே. (௧௪)

காரார்கூந்தற்பிறைநுதல்வாட் கட்செங்குமுதவாய்மாதர், தீராமயக்கிற்பட்டுழலுந் தீயேனுய்தற்கருளாயோ, ஏரார்ஞானகாண்டமுடி வேகமாகத்தகவிலர்க்குப், பாரார்கன்மகாண்டத்திற்பலவாச்சொல்லுவேதாகமனே. (௧௫)

பேதமிலாத்தேவேபொற்பிரபைக்குன்றே பேசரியவுயிர்க்குயிரேபிரமமேமே, வேதமிலாக்களமேயிலகுவேயெங்கும்யாவைக்குங்கரியேநல்லியசேபக்தக், கேதமிலாத்துரியநகரதிற்கிளர்ந்தகேவலப்பெண்கூடிநலங்கிடைத்தல்வேண்டிச், சேதமிலாச்சன்மார்க்கஞ்சிறிபோன்சித்தச் சிறுதுரகநடக்கினை திருவுளத்தே. (கசு)

தருமநிலேநிற்குமொருசம்புமுனிவற்கநிய சம்புகனிபை, யருளும்வளர்கங்கையினைவேய்ந்தனிரும்புலியினதளரிடமா,பருமலர்களிற்பாஞ்சசன்னியமுமன்னமதும்வாழுமதனுற், றிருவனிகர்பைங்கமலநற்றடமிலங்குமொருதில்லைநகரே. (கஎ)

ஒன்றேதெய்வமுண்டென்றுணர்மி னுலகீரே, மன்றேயாடும்வானேறுற்காண்மி னுலகீரே, நன்றுமடிகணுடிப்பிடிமி னுலகீரே, பொன்றுமுத்திப் புரிகைக்கொளலாமுலகீரே. (கஅ)

அரனுமூனையுளமாம்பெருங்கோயில்வைத் தன்பெனும்புட்,கரமாட்டிச்சாந்தமென்சந்தனஞ்சாத்திக்கருத்தொருமித், தானர்தியானமலர்தூஉய்த்தற்போதமெனுள்ளமுது, திராமாநிவேதிப்பதென்றோநடேசசிதம்பரனே. (கசு)

ஆர்புலக்காட்டைப்பஞ்சாக்கரவாட்கொண் டூ
கற்றிமனப், பார்தான்றிருத்திச் சிவஞானவித்தைப்
பதித்தருளா,நீர்மிகப்பாய்ச்சியுயிர்ப்போதவெங்களை
நீத்துச்சிவா, காரவுணவுணச்செய்வாய்நடேசநற்கா
ரணனே, (௨0)

நெஞ்சேகுருசொன்னெறியினின்றாலுநெடும்ப
ணியி, னஞ்சேகளத்திற்குடியாநடேசனறியகஞ்சச்,
செஞ்சேவடிகதியென்றிருந்தாலுஞ்சிறிதுமயர்ந், தஞ்
சேனடுங்கக்கொலேயேபுரிந்திடு மந்தகற்கே. (௨௧)

எப்பிறப்பினேயெய்தினு
மொப்பிலுன்பதத்தொன்றிடுங்
கப்பிலன்புகனத்துறத்
தப்பிலாதருள்சம்புவே. (௨௨)

விண்ணப்பம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

நிலேமண்டிலவாசிரியப்பா.

பூமலிகற்பகப் பொன்னுலகமரரு
நாமலிவேதமு நாடித்துதிக்கச்
சிவகாமியம்மை திருவிழிகளிக்க
வவனிவாழுயிர்க ளருங்கதிசேர

வமையும்பொதுகட மருளியசிவமே
யிமையாநாட்டத் தெழுமற்புதமே
யேதமாம்பந்த மெழின்முத்தியினும்
பாதுகாத்தருளும் பரிபூரணமே
சரியைகிரியைக் குரியோர்வணங்க
வுருகாணுவாம் பெருஞ்செல்வம்மே
தகவுறநாடிச் சக்காமுணர்ந்து
சுகமுறநாடிச் சுத்தியும்பெற்றே
யாசான்பதங்க ளன்புடன்போற்றிப்
பேசாதிருந்து பிராணபானன்
றஞ்செயலடக்கித் தம்வசமாக்கிச்
செஞ்சுடர்மதிதாம் வலமிடந்திரியுங்
கிரியாஞ்சுழினைப் புருவநடுநோக்கிப்
பொறிவழியாற்புலம்புகு மனகிறுத்திக்
குறிசிவத்தியானங் கொண்டயோகியர்க
டெரிசனஞ்செய்யுந் தேஜோமயமே
திரிமலமறுத்துச் செய்வினையால்வரு
மின்பத்துன்பங்க ளியல்பெனப்பொறுத்தே
யன்பும்வெறுப்பு மகன்றிடத்தள்ளி
வேதாகமமுடி வோதியுணர்ந்தே
யீததுவெனுந்தற் போதமுமொழித்து
கவமுறுபொருளுணர் சிவஞானிகளின்

மோனத்தெழுந்த வானந்தம்மே
தீர்த்தமாதி யெவைக்குஞ்சீர்ப்பர
மார்த்தமுணர்ந்த மதிஞர்க்குறவே
மண்ணறலங்கி வாயுவாகாய
மொண்கதிர்மதிதம் மூடனுணர்வான
வெட்டுருவாகிச் சுட்டறுபொருளே
மாயைமலஞ்செய் மயக்கத்தாலே
தூயஞானச் சுகநெறிவிட்டே
குடும்பபாரக் கொடுஞ்சுமைதாங்கி
யில்லாண்முதலோ ரெண்ணமாம்பொதியே
ரேல்லையினடத்திக் கொண்டுறுகண்ணூர்
மடமாமருநெறி நடந்திடும்போது
மனமேகந்தான் றனமுதலான
விச்சையாநீரை நிச்சமும்பொழிவுற
வைம்புலமான வகலிருண்மயங்கி
வன்பவமாமுள் வனத்தினடைந்தே
யழியாக்கவலை யாங்களருளாயி
னழுந்திவருந்தி யாகமுமிளைத்துச்
சித்தங்கலங்கும் பித்தனேற்கென்றே
குளிர்பிறைமதியங் குலவுன்முகமு

மளிநிறைகமல மனவிருவிழியுஞ்
சத்தியவாக்குந் தன்கழுநீர்மலர்க்
கத்திகைப்புயமுங் கண்டடைந்தோரை
யன்புடனெடுத்தே யணைத்திடுகரமு
மின்பங்கொடுக்கு மிணைத்தாண்மலருஞ்
சிவணிச்சுயம்பிர காசதேசிகனென்
றவனியினிவக் தடியேன்மீதி
லருள்விழிசாத்தித் தெருளுறுதீட்சை
பொருளுறச்செய்தே யொருமொழிவழியா
ஞானமொன்றுமே மோனமளிக்குஞ்
சற்குருலிங்க சங்கமவழிபாம்
பொற்புண்ணியங்கள் புனிதசித்தமது
செய்தஞான நூல் சிரவணந்தியா
மெய்ச்சரியாதி விதிசெலுத்துவித்
துண்மைமுத்தித் திண்மைதருமென்றும்
வாசனையாலே வந்திடுமேச்ச
மாசைவெகுளி யடர்மயக்கறுத்து
யானெனதென்செருக் கிகந்தருடவங்குண
ஞானநெறியி னடப்பாயென்று
மிருவினைசமனுக் கருதிதியென்றும்
வினைகடம்மாலே தனுவருமென்றுந்

தூலமுதலவை துக்கமசுத்த
மேலுமியல்பா மிவையுனையறியா
வழியுமாகலி னெழிலுளசென்னிகழ்
மேலெதிரொன்ற காலமூன்றினுமே
குற்றிமகன்போ லூற்றனவான
வுருநாமவக ளொருங்கேயொய்யென்
றுண்மைவிளங்கக் கண்ணையளித்தும்
பூதிசிவமணி புண்ணியபஞ்சாக்கரப்
போதப்பொருண்மெய்ப் போதமாமென்று
நிற்குணபூசை நெறியறிவித்துஞ்
சற்குணமாக்கும் பஞ்சதசாங்க
யோகம்பகர்ந்து மோகமுற்றவிர்த்துங்
குடவெளிமாவெளி யடைவுபோலக்
கருவிகடம்மைக் கலந்துங்கலவா
திருந்துயிரிக்கு மியல்புடையறிவே
சச்சிதானந்த தற்சொருபமது
நிச்சயமாக நீயென்றுரைத்து
மிதயத்துறுதி பதித்திந்நிலையின்
ஞானசமாதி நண்ணியின்புற்று
மோனமாய்ச்சுட்டு முற்றுநீக்கிந்நிலை
யியல்புறமுத்தியு மெம்மதத்தந்தத்

துயர்ந்திடுநிலையு முவமையற்றதுமா
மாதலினன்பா யாக்கையுள்ளளவுந்
தீதுமையையந் திரிபிலாதமர்ந்தே
யிந்நிலைவாழ்தி யென்றும்புகன்றே
யுன்னடியேனைக் காக்குமுண்மையனே
கைம்மாறுவேண்டாக் கருணைக்கடலே
பொய்ம்மலமறுக்கும் புண்ணியமுடிவே
பவமறுத்தருளுஞ் சிவபுரத்தரைசே
கன்னற்பாகே கதலிக்கனியே
யென்னுடையுயிரே யென்கண்மணியே
யுய்வகைகாட்டு முணர்வாமணியே
கைதரவந்த கடவுள்கற்பகமே
யிதயகுகேச வதிரகசியமே
சுருதித்தலைவாழ துரியச்சரணந்
தருவாய்தருவாய் சரணஞ்சரணே.

ஆசிரியப்பா முற்றிற்று.

ஷ. விருத்தம்.

வெண்பிறையணிந்தவேணி விண்ணவரவன்பி
லாத, பண்பினனெனினுமுன்னைப்பாடினுலிரங்குவா

யென்,றெண்படுதோத்திரங்களிசைத்தனளருளாலே மை, தண்படுகுணமாக்கொண்டு சரணருள்வாய்நீ வாழி. (௧)

சிவசந்நிதானமுறை
முற்றுப்பெற்றது.

உ

திருச்சிற்றம்பலம்.

## சிவகாமியம்மைபேரில்

### ஆசிரியவிருத்தம்.

பற்றியபசியிற்கிரையதுதேடிப் பறந்திடக்கடு வெளிசுழல்கால்பயந்தருமிடிகண்மினலிருண்ம ழை சம்பவித்திடச்சிறகுகளோய்த,லுற்றிடும்பொழுதில் வில்லுடையனேக்கண் டொடுங்கியபறவைபோற்றுய ர முறுவரிப்புவியினினதருளிலதேலுலகினிலன்புறு ந்தாய்தான், பெற்றிடுமகவிற்பேதையாயிருந்தாற்பி ன்றளிவிடுவதுமுண்டோ பிழைகளியான் செயினும் பொறுத்துளமகிழ்ந்து பிழைக்குமாறருள்புரிந்தா ளாய், சிற்றிடைபாளேயருட்பெருங்கடலே சித்திந ந்திடுகுணக்குன்றே திகழ்சிதம்பரியேமகிழ்திகம்பரி யே சிவசிவகாமசுந்தரியே. (௧)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

## குருவ்ப து தி.

என்னகத்துண்ணீ யுனக்குணுகியிருப்பதை யறிந்திடாதலைந்து, பின்னியகோசரூபமாமாயைப்பி ணிப்புறுபேதையேன்முன்வந், தின்னருள்புரிந்தே யொருமொழிபேசியியைந்ததற்போத நீங்கினக்காற் றுன்மறையாகமாந்தமொன்றெனச்சொல் சுயம்பி ரகாசதேசிகனே. (௧)

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்

## அ டி யா ர் து தி.

கருநீறுபடுத்துமுத்தி காட்டிடுமீசஞானத்,திரு நீறுமணிபூண்டேத்தல் சிறப்பெழுத்தைந்தையோதா லிருநீர்மையின்றியுன்ன லேய்ந்தறிந்தணைதன்மேவு ம், பெருநீர்மையார்க்கன்பாற்றும் பெரியவர்க்கடியே ன்யானே. (௧)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

# விளம்பரம்.

---

இதனாலியாவருக்குமறிவிப்பதியாதெனில் செ ன்னைமாநகரம் பெத்துநாயக்கன்பேட்டை சீரங்கப்ப ட்டணம் சுப்பிரமணியமுதலியார்தெருவில் (உஅ) வது கதவிலக்கமுள்ளவீட்டிலிருக்கும்கொண்ணூர் மாணிக்கமுதலியாரவர்களுடையமனோன்மணிவிலா சமென்னும் அச்சுக்கூடத்திற்பதிப்பித்திருக்கும் புத் தகங்களாவன.

கஉ, ஸ்கந்தமாகியபாகவதவசனம் சித்திரப்ப டங்களுடன்

விசேஷமாகஅநேகங்கதைகளும் விருத்தங்களு ஞ்சேர்ந்தபாரதம்வாலம்-ச-கூடியபுத்தகம்.

அருட்பா.

பெரியபுராணம்பாட்டு.

காளத்திபுராணம்.

கந்தபுராணச்சுருக்கம்.

சிதம்பரபுராணம் மூலமும் உரையும்

பத்திராசலராமதாசுகீர்த்தனை.

சானந்தகணேசர்புராணம்.

ஞானவாசிட்டவசனம்.

நைடதமூலம்.

இரங்கேசவெண்பா மூலமும்உரையும்.

இன்னும்பலவிதபுத்தகங்களும் விலைசரசமாய் ஷெ அச்சுக்கூடத்திலும் சிதம்பரம்மேற்கோபுரவாயற்படியில் புத்தகஷாப்புக்கடைவைத்திருக்கும் ஷெ கொ - மாணிக்கமுதலியாரவர்களிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.